# பரணர்

(செய்யுள் தொகை, முகவுரை, ஆராய்ச்சிக் குறிப்புரைகளுடன்)

வித்வான்

டாக்டர் **ந. சுப்ரமண்யன்** எம். ஏ., பிஎச். டி.,

வரலாற்றுத்துறைப் பேராசிரியர்

மதுரைப் பல்கலைக் கழகம்





கூடல் பப்ளிஷர்ஸ்

217 - A, தெற்கு மாசி வீதி

மதுரை - 625001

1975

இந்நூல்

கரணமமைந்த காசறு செய்யுட் பாடிய

பரணரை ஆதரித்த

கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன்றன்

உரிமை.

## நூன்முகம்....

சங்க இலக்கியங்களைத் தொகுத்தோர், புலவர்கள் பலர் இயற்றிய பாடல்களையும் பொருள் அமைதி, அடியளவு, பாட்டுஎண் முதலிய அளவைகளின் அடிப்படையில் தொகுத்து நற்றிணை ஆகிய எட்டுத்தொகை நூல்களை ஆக்கினர். இம்முறையை மாற்றி ஒரே புலவர் இயற்றிய பாடல்கள் பல தொகைநூல்களில் சிதறியிருப்பவற்றைச் சேர்த்து அவ்வாசிரியர் பெயரில் ஒரு நூலாக வெளியீடுவதும் ஒருவகைத் தொகையேயாம் என்று கருதி மேற்கொண்ட முயற்சியின் முதல்நிலை எனலாம் **பரணர்** என்னும் இந்நூலை. இவ்வாறே மாமூலனார் கபிலர், நக்கீரர், அவ்வையார் முதலிய புலவர்களின் செய்யுள்களையும் தொகுத்து அவ்வப் புலவர் பெயரால் தனித்தனி நூலாக வரும் வெளியீடுகள் இம்முயற்சியின் அடுத்துத்தொடரும் நிலைகளாம்.

இந்நூலில் சங்கப் புலவரான பரணரின் செய்யுட்களின் மூலமும், குறிப்புரையும், ஆராய்ச்சி முகவுரையும், பிற்சேர்க்கையாக ஒரு பெயரகராதியும் அடங்கியுள்ளன. சங்கப்புலவர்களின் பாடல்களைத் தமிழ் கற்றோரிடையே பெருவரவிற்ருக்குதற்கு இம்முயற்சி உதவும் என்பது எமது துணிபு.

வளர்ச்சி அடைந்து வரும் புதிய நிறுவனமாகிய கூடல் பதிப்பகத்தார் குறுகிய காலத்தில் புதிய சோதனைகள் பல நிகழ்த்தி சாதனைகள் புரிந்து வருகின்றனர். நூல் வெளியீட்டுத் துறையில் அவர்கள் சர்வதேச புகழ் பெற வேண்டுமென்பது என் அவா. இந்நூல் கூடல் பதிப்பகத்தாரின் முதல் தமிழ் நூலாகும். கூடல் பதிப்பகத்தைச் சேர்ந்த திருவாளர்கள் க. மு. நடராஜன், வி. ஆர். சங்கரசுப்பு, சு. லோகநாதன் ஆகியோருக்கு எனது நன்றியும் பாராட்டுதலும் உரியதாகும். அச்சுப் பிரதிகளை திருத்தி உதவிய திருவாளர்கள் எஸ் கிருஷ்ணசாமி, ஆர். பாலகிருஷ்ணன் ஆகியோருக்கும் எனது மாணவர் திரு ச. செயப்பிரகாசத்திற்கும் எனது நன்றிகள்.

ந. சுப்ரமண்யன்




உள்ளுறை....

# முகவுரை




## 1. காலம்

இவர் சங்ககாலத் தமிழ்ப் பெரும் புலவர்களில் ஒருவர். இவர் வாழ்ந்த காலத்தைப் பற்றி மரபு-இலக்கிய வாயிலாகவும், வரலாற்றுச் சான்று வாயிலாகவும் ஓரளவு அறிகிறோம். மரபு வாயிலாகத் தமிழ்ச் சங்கத்தைப் பற்றி உரைநடையில் குறிப்பிடும் நூற்பகுதிகளில் இறையனார் அகப்பொருள் முதற் சூத்திர உரையே காலத்தால் முந்தியது. அப்பர் தேவாரமும், வேள்விக்குடிச் செப்பேடும் தமிழ்ச் சங்கத்தைப் பற்றிக் குறிக்கின்றனவாயினும் அவை அப்பெயரைக் குறிக்கின்றனவேயன்றிப் பிற விவரங்களைத் தரவில்லை. இறையனார் அகப்பொருள் உரை (ஏ.8—ம் நூற்றாண்டில் முற்றுவிக்கப்பட்ட ஓர் அகப்பொருள் இலக்கண உரைநூல்) மூன்று சங்கங்கள் இருந்தனவாகவும், அவை தலை, இடை, கடை எனப்படும் எனவும், வரலாற்றாளர்கள் நம்பிக்கையைச் சோதிக்கும் முறையில் பலவாறாகப் புனையப்பட்ட சில கருத்துக்களையும் கூறுகின்றது. இவ்வரலாற்றில் நீக்கற்பாலன உளவேனும் தமிழ்ச் சங்கம் என்பது ஒன்று பாண்டியன் அவைக்களத்தே வைகைக்கரை மதுரையில் வழங்கியமை பிற சான்றுகளாலும் பெறப்படும். அவ்வுரை கடைச் சங்கப் புலவர்களைக் கூறுமிடத்து 'சிறுமேதாவியார், சேந்தம்பூதனார், அறிவுடையரனார், பெருங்குன்றூர்க்கிழார், இளந்திருமாறன், மதுரை ஆசிரியர் நல்லந்துவனார், மருதனிளநாகனார், கணக்காயனார் மகனார் நக்கீரனார் என இத்தொடக்கத்தார் நாற்பத்தொன்பதின்மர்' என்று கூறுகின்றது. ஆனால் பரணர் உள்ளிட்ட கபிலர், அவ்வையார் ஆகிய சில சிறந்த சங்கப் புலவர்கள் பெயர்கள் ஈண்டுக் காணப்படுவதில்லை.

ஆதலால் மரபிலக்கிய வாயிலாகப் பரணரை ஓர் சங்கப் புலவர் என்று அறிய வழியில்லை. ஆயினும் 'கபிலபரணர்' ஆகிய இடைக்காலச் சொற்றொடரால் பரணரைப் பற்றி இடைக்காலச் சங்க நூல் உரைகாரர்கள் வாயிலாகக் கேள்வியுறுகிறோம். அன்றியும் புறநானூறு, அகநானூறு, பதிற்றுப்பத்து ஆகிய சங்க இலக்கியப் பாக்களின் இறுதியில் காணப்பெறும் பண்டைய அடிக் குறிப்புக்களாலும் பரணரைப் பற்றிய சில விவரங்கள் தெரிகின்றன.

ஆயினும் சங்ககாலம் என்பது யாது? என்பதற்கு வரலாற்றுச் சான்றுகளிலிருந்து விடை கண்ட பிறகே சங்க இலக்கியத்திற் காணப்பெறும் உட்குறிப்புக்களைக் கொண்டு பரணர் காலத்தை அறுதியிட்டு கூற இயலும். சங்க காலத்தை அறுதியிடுதற்கு மூன்று சிறப்பான வரலாற்றுச் சான்றுகள் உள:

1. சிலப்பதிகார உரைபெறு கட்டுரையுள்ளும்,[1] வரந்தரு காதையுள்ளும்[2] கூறப்படும் இலங்கைக் கயவாகு வேந்தன் இலங்கையை ஆண்ட கஜபாகு1 ஆதல் வேண்டும். அம்மன்னன் கி. பி. 173—191 வரையில் ஆண்டதாக மகாவமிசத்தைப் பதிப்பித்த கெய்கர் (Geiger) கருதுவார். சேரன் செங்குட்டுவன் கண்ணகிக்கு எடுப்பித்த கோயில் விழாவணி காணவே அவ்வேந்தன் தமிழகம் போந்தான்; ஆதலால் செங்குட்டுவன் காலமும் கி. பி. 2-ம் நூற்றாண்டின் இடைப்பகுதியும் பிற்பகுதியும் ஆதல் வேண்டும். இஃது உண்மையாயின் செங்குட்டுவன் காலம் ஏ. கி. பி. 135-190 என்று கொள்ளலாம்; ஆயின், அவன் அவைக்களத்திலிருந்து அவனைப் புகழ்ந்து பாடிய பரணரும் ஏறக்குறைய அக்காலத்தவரே என்பதும் பெறப்படும்.

---

1. "அதுகேட்டுக் கடல் சூழ் இலங்கைக்கயவாகு என்பான் நங்கைக்கு நாட்பலி பீடிகைக் கோட்டம் முந்துறுத்தாங்கு அரந்தை கெடுத்து, வரந்தரும் இவளென ..... பாடி விழாக்கோள் பன்முறையெடுப்ப ....... விளையுள் நாடாயிற்று"

2. "கடல் சூழ் இலங்கைக் கயவாகு வேந்தனும் ......வந்தீகென்றே வணங்கினர்".

2. யவனர்கள் எனப்பெற்ற கிரேக்க ரோமானிய ரோடு தமிழர் நடத்தி வந்த பயன்தரு வாணிகம் கி. பி. முதல் மூன்று நூற்றூண்டுகளில் நடைபெற்றது என்பதை டாலமி, 'பெரிப்ளூஸ்' ஆசிரியர் முதலியோர் கூற்றுக் களாலும், 'யவனர் இயற்றிய வினைமாண் பாவை' என்று நக்கீரர் நெடுநல்வாடையுள்ளும், 'யவனர் நன்கலம் தந்த தண்கமழ் தேறல்' என்று புறநானூற்றுள்ளும் கூறியவாற்றாலும் உணர்ந்து பரணர் காலத்தை அறியலாம். பதிற்றுப்பத்தில் இயமவரம்பன் நெடுஞ்சேரலாதனைக் குமட்டூர் கண்ணனார் பாடியதை விளக்குமிடத்து 'நயனில் வன்சொல் யவனர்ப்பிணித்து'[3] என்று கூறப்படு வதும் ஈண்டுக் காணப்பெறும்.

3. புதுச்சேரி அருகில் அரிக்கமேட்டில்[4] கண் டெடுக்கப்பட்ட ரோமானியச் சிதைவுகளாலும், தமிழக-யவன வாணிகத் தொடர்பு கி. பி. முதல் மூன்று நூற் றூண்டுகளைச் சார்ந்தது என்பது புலப்படும்.

இக்கூறிய காரணங்களால் செங்குட்டுவனால் போற்றப் பெற்ற பரணர் கி. பி. 2-ம் நூற்றூண்டினர் என்பது பெறப்படும். இவர் நீண்டகாலம் உயிர் வாழ்ந்திருந்தார் என்று கருத இடமுண்டு. உருவப்பஃறேர் இளஞ்சேட் சென்னியையும், அச்சென்னியின் ஐந்தாம் தலைமுறை யினனான செங்குட்டுவனையும்[5] பாடியிருத்தலால் இப் புலவர் ஏறத்தாழ நூறு ஆண்டுகள் வாழ்ந்திருந்தார் என்று கொள்ளலாம். ஆனால் இவர் செங்குட்டுவன் பத்தினிக் கடவுளுக்குக் கல் தரவேண்டி வடநாடு செல்லு தற்கு முன்பே இறந்துபட்டிருத்தல் வேண்டும். ஏனெனில் இவர் பதிற்றுப்பத்தில் அக்குட்டுவன் மீது பாடிய ஐந்தாம் பத்தில் ஓரிடத்திலேனும், அன்றித்தமது பிற செய்யுட் களிலேனும் இவ்விவரத்தைக் கூறினாரில்லை. "ஐந்தாம்

---

3. இரண்டாம் பத்து: பதிகம்
4. அதனைச் சிலர் அருகன்மேடு என்பர்.
5. ஐந்து தலை முறையினர்:
   1. உருவப்பஃறேர் 2. கரிகாலன் 3. மணக்கிள்ளி
   4. நெடுஞ்சேரலாதன் 5. செங்குட்டுவன்.

பத்தினைப் பாடிய பிறகு செங்குட்டுவன் வடநாடு சென்ருன் என்பது ஏற்புடைத்தே; ஆயினும் பரணர் அக்குட்டுவனின் வடநாட்டுப் போர்ச் செயல்களைப் பாடாது விடுத்தனரேயன்றி அதற்கு முன்பு இறந்து பட்டார் என்று கூறல் வேண்டா'' எனின் தம்மை மிகவும் ஆதரித்த பேரரசனின் பெரும் புகழுக்குக் காரணமான வரலாற்றுச் செய்தியை இப்புலவர் பாடாதிருப்பர் எனல் பொருந்தாதாதலால் பரணர் இறந்த பிறகே செங்குட்டு வன் கண்ணகிக்குக் கோயில் எடுப்பித்தான் என்க, சிலப் பதிகாரம் வஞ்சிக் காண்டத்துள் கண்ட செங்குட்டுவன் செய்திகள் யாவையுமே பிற்காலத்தெழுந்த அக்காப் பியத்தை இயற்றிய ஒரு புலவரின் கற்பனைக் கூற்றுக்கள் என்று கொள்ளுவார்க்குச் சிலப்பதிகாரத்தைக் கொண்டு சங்க காலத்தை நிறுவுதல் உடன்பாடன்று[6]. சிலப் பதிகாரத்தின் முதல் இரண்டு காண்டத்துள் கண்ட செய்திகளின் வரலாற்றுத்தன்மை யாதேயாயினும் வஞ்சிக் காண்டத்துச் செய்திகள் வரலாற்ருேடு முரண் பட்டவையல்ல என்பதே எமது கருத்து.

## 2. வாழ்க்கைக் குறிப்புக்கள்

இவருடைய வாழ்க்கையைப் பற்றித் தொடர்ச்சி யான குறிப்புக்கள் கிடைத்தில. ஆங்காங்கு இவராலும், பிறராலும் இயற்றப் பெற்ற இலக்கியங்களில் வரும் குறிப்புக்கள் கொண்டு இவர் வாழ்க்கையில் சில தொடர் பற்ற நிகழ்ச்சிகளை உணர முடியும்.

சங்க இலக்கியப் பாடல்களிற் காணப்பெறும் அடிக் குறிப்புக்களினின்றும், அவர் பாடல்கள் என்று தெளிந்த வற்றின் உள்ளுறையினின்றும் அவரைப்பற்றி நாம் அறிவனவே நம்பற்பாலவாம். அன்றி, திருவாலவாய்த் திருவிளையாடற் புராணம், பரஞ்சோதி திருவிளையாடற் புராணம், ஹாலாஸ்யமகாத்மியம் என்னும் நூல்கள் கூறும்

6. இவ்வாறு கொள்ளுவார் எஸ். வையாபுரிப்பிள்ளை, கா. அ. நீலகண்டசாஸ்திரியார் முதலியோர்.

கட்டுக்கதைகள் வரலாற்றுக்கண்ணோடு இலக்கியத்தை ஆராய்வார்க்குப் பயன்படுவன அல்ல. இவர் பெற்றோர் யாவர், பிறந்த ஊர் யாது என்பன அறியப்படவில்லை. ருத்ரபதியார் என்பார் இவரைச் சைவ சமயத்தினர் என்றனர்.[7] பிற்காலத்து எழுந்த பரணதேவ நாயனார் சிவபெருமான் திருவந்தாதி என்னும் நூலை இயற்றியதைக் கொண்டும், அந்நாயனாரும் சங்க காலப்பரணரும் ஒருவர் என்று கொண்டமையாலும் இக்கூற்று எழுந்தது போலும். பதினோராம் திருமுறையில் சிவபெருமான் மீது பா இயற்றிய நாயனார் சங்க காலப் பரணருக்கு எட்டு நூற்றாண்டேனும் பிற்பட்டவர். ஆதலால் பரணருடைய சமயத்தைத் துணிதல் இயலாது. இவருக்குச் சற்று இளையரான கபிலரின் பெயரைக் கொண்டு ஒரு கபிலதேவ நாயனாரும், அதிகமானைப் பாடிய அவ்வையாரின் பெயரால் ஆத்திசூடி பாடிய அவ்வையாரும் இடைக்காலத்தே வாழ்ந்தது போல இவ்விரு பரணரும் முறையே சங்க காலத்திலும் பேரரசுச் சோழர் காலத்திலும் விளங்கினர். கபிலர் தம்மை 'யானே.......... மன்னும் அந்தணன்'[8] என்று கூறிக்கொள்வது போலப் பரணர் தம் குலத்தைப் பற்றி எங்கும் யாதொன்றும் கூறவில்லை. ஆயினும் மேற்கூறிய ருத்ரபதியார் இவரை அந்தணர் என்பார். இக்கூற்றுக்கும் சான்று இல்லை.

இனி ''சீறியாழ் செவ்வழி பண்ணி யாழநின்
காரெதிர் கானம் பாடினே மாக'' (புறம் 144)
''அரிக்குரற் றடாரி உருப்ப ஒற்றிப்
பாடி வந்திசிற் பெரும'' (புறம் 369)

முதலிய இடங்களில் இவர் பாணர் மரபினை மேற்கொண்டு பாடியுள்ளமையின் இவரைப் பாணர் என்றும் அப்பெயரையே சிலர் ஏட்டில் தவருகப் 'பரணர்' என்று குறித்தது கொண்டு பிற்காலத்தில் பரணரெனவும்பட்டார் என்றும் சிலர் கூறுவர்; ஆயினும் இவர் காலத்தவரான அவ்வையார்

7. கலைக்களஞ்சியம்: 'பரணர்'
8. புறம். 200

"பரணன் பாடினன் மற்கொல் மற்றுநீ
முரண்மிகு கோவலூர்நூறி" (புறம் 99)

என்னுமிடத்து எதுகைத் தொடை அமைத்துள்ளமையின் பரணரே பெயர் என்பது பெறப்படும். ஆதலால் இவர் குலத்தைப் பற்றி நாம் அறியக்கூடவில்லை என்று விடுத் தலே சாலும். இவர் கபிலரோடு தொடர்புடையர் என்பதை இடைக்கால உரையாசிரியர்கள் உம்மைத் தொகைக்கு எடுத்துக்காட்டாகப் பலமுறை கூறும் கபில-பரணர் என்னும் தொடர் விளக்கும்.[9] ஆனால் அத் தொடரால் அவர்களிடையே நட்பிருந்ததா பகையிருந் ததா என்பது விளங்கவில்லை. ஈதிவ்வாறாகப் புத்தமித் திரனர் (11-ம் நூற்றாண்டு) இயற்றிய வீரசோழியத் திற்குப் பெருந்தேவனர் உரையில் 'கபில-பரணர் தங்களிலே வாது செய்தார்கள்' என்று கூறிய உதாரணத் தால்[10] இவர்களிடையே வாது நடந்தது என்பது போதரும். ஆதலால் இப்புலவரிடையே முரண்பாடி ருந்ததற்குச் சான்று உண்டேயன்றி நட்பிருந்தமைக்குச் சான்று இன்று என்க. பரணரைக் கபிலர், கல்லாடர் முதலிய பெரும் புலவர்களுக்கு நிகராக அறிஞர் கருதினர் என்பது 'ஆக்கவும் கெடவும் பாடல் தரும் கபிலர், பரணர், கல்லாடர், மாமூலர், பெருந்தலைச்சாத்தனர் இத் தொடக்கத்தோர்' என வரும் யாப்பருங்கலவிருத்தித் தொடரால் விளக்கமுறும்.[11] ஆதலால் இவரை அழிக்கவும் ஆக்கவும் வல்ல (சாபானுக்ரக சாமர்த்தியம் உள்ள) பெரி யோராகச் சான்றோர் கருதினர் என்பது போதரும்.

இவர் ஒரமயம் மலையமான் திருமுடிக்காரியை அதிக மான் நெடுமானஞ்சி வென்றதைப் புகழ்ந்து பாடினர். அவ்வரிய பாடல் இப்பொழுது கிடைத்திலதாயினும் புற நானூற்றில் 'அமரர்ப் பேணியும்' என்னும் செய்யுளில் அவ்வையார் வாக்கால் இதை உணரலாம்.[12] "அன்றும்

9. தொல். சொல். 421 சேனவரையர் முதலியோர்
10. வீரசோழியம். தொகைப்படலம் 6 உரை
11. 93-ம் சூத்திர உரை
12. புறம். 99

பாடுதற்கு அரியை; இன்றும், பரணன் பாடினன் மற்கொல்" என்று அவ்வையாரே கூறுவாராயின் பரணர் தம் காலத்திலேயே பெரும் புலவர்களாலும் நன்கு மதிக்கப்பட்டார் என்பது விளங்கும்.[13]

இவர் ஒருமுறை வையாவிக் கோப்பெரும் பேகன் என்னும் வள்ளலிடமிருந்து யாதோ ஒரு காரணத்தால் பிரிந்து வருந்தியிருந்த அவன் மனைவியான கண்ணகி யென்பாளை அவனோடு கூட்டுவிக்க வேண்டிப் பாடிய பாடல்கள் புறநானூற்றில் காணப் பெறுகின்றன. ஆயினும் அவருடைய முயற்சி யாதாயிற்று என்பது புலப்படவில்லை. பரணர் பிற புரவலர்களோடு கொண்டிருந்த தொடர்பிற்கும் சேரன் செங்குட்டுவனோடு கொண்ட தொடர்பிற்கும் வேறுபாடு உண்டு. கபிலரும் பாரியும் அவ்வையும் அஞ்சியும் என்போரைப் போலப் பரணரும் செங்குட்டுவனும் என்றால் அது மிகையன்று. பரணர் செங்குட்டுவன் அவைக்களத்தே புலவராயிருந்தார். இவர் அக்குட்டுவன் மீது பத்துப்பாடல்களைப் பாடிப்புகழ்ந்தார். அப்பாடல்கள் பதிற்றுப்பத்தில் ஐந்தாம் பத்தாகத் தொகுக்கப்பட்டுள்ளன. அப்பாடல்களின் சிறப்பு 'கரணமமைந்த காசறு செய்யுள்' என்று பதிக ஆசிரியர் புகழ்கின்றமையாற் பெறப்படும். இப்பாடல்களைக் கேட்டு மகிழ்வுற்ற சேரன் புலவர்க்குப் பரிசிலாக உம்பற்காட்டு வாரியை[14] அளித்ததோடு 'தன்மகன் குட்டுவன் சேரலையும்' கொடுத்தான். ஈண்டுப் புலவர்க்கு மகனைப் பரிசளித்தான் என்பது புலவருடைய மாணவனாகத் தன் மகனை இருத்தினான் என்றே பொருள்படும்.[15] இவர் செங்குட்டுவன் தந்தையான குடக்கோ நெடுஞ்சேரலாதனையும் புகழ்ந்து

13. இவ்வாறே புறம். 53-ல் பொருந்திவிளங்கீரனார் கபிலரைப்பற்றி கூறியுள்ளமை நினைவுகூர்தல் தகும்.

14. உம்பற்காடு: யானைக்காடு; 'வேழக்காடு என்ற பிரதேசம் கடன்மலை நாட்டில் ஒன்று உண்டு'. Travancore Archaeological Series Vol. I. page. 188. வாரி: வருவாய்

15. மு. ராகவ ஐயங்கார்: சேரன் செங்குட்டுவன், பக். 25, 119; வே. வேங்கடராஜுலு ரெட்டியார்; பரணர்: பக். 30.

பாடியவர். இவர் பாடல்களில் நன்னன் என்னும் மன்னன் ஒருவனைப் பற்றிய குறிப்புக்கள் வருகின்றன. குறுந் தொகையில் அவனைப் 'பெண்கொலை புரிந்த நன்னன்'[16] என்கிறார். இவ்வரலாற்றுக் குறிப்பால் நன்னன் என்பான் ஒரு கொடுங்கோலன் என்பதும், அத்தகை யாரை ஒறுப்பார் இலரேனும் பரணர் போன்ற பாவலரில் வெறுப்பார் பலரிருந்தனர் என்பதும் விளங்கும். அந் நன்னனைப் பற்றிப் புகழ்ச்சியான செய்திகள் சிலவும் இவர் பாடல்களில் காணப்பெறுகின்றன. ஒரே புரவலனைப் பற்றி இப்புலவர் இகழ்ந்தும், புகழ்ந்தும் பாடுவரோ எனில் அப்புரவலன் நன்றி செய்ததற்காகப் புகழ்ந்தும் தீமை புரிந்ததற்காக இகழ்ந்தும்; வேண்டுதல் வேண் டாமை இலாத மனப்பான்மையில் பாடிப் போந்தார் என்க. இவர் நன்னனது நற்செய்கைகளையும் தீப் பண் பினையும் சீர்தூக்கி இறுதியில் 'அவன் நிரையம் செல் வான்'[17] என்று முடிவு கட்டினமை 'குணம் நாடிக் குற்ற மும் நாடி அவற்றுள் மிகை நாடி மிக்க கொளல்' வேண்டி யமை பற்றி.[18]

## 3. பரணர் என்னும் பெயர் கொண்ட பிற புலவர்கள்

சங்க காலத்தே வன்பரணர், நெடுங்கழுத்துப் பரணர் என்று வேறு இரு புலவர்களும் இருந்தனர். அவர்களிற் பிந்தியவர் உறுப்பாற் பெயர் பெற்றவர் போலும்; முட மோசியார், பெருந்தலைச் சாத்தனார், நெட்டிமையார் என்பாரைப் போல, இவர் பாடல் ஒன்று புறநானூற்றில் காணப்படுகின்றது.[19] வன்பரணர், நள்ளி, ஓரி என் பாரைப் புகழ்ந்து பாடியவர். இவர்களைப் பரணரினின்றும் வேறுபடுத்திக் காண்பதற்கு 'வல்', 'நெடுங்கழுத்து' ஆகிய அடைமொழிகள் சேர்க்கப்பட்டன. இதனால் பரணர் என்னும் பெயர் அக்காலத்தில் பெரு வழக்கில் இருந்தமை பெறப்படும்.

---

16. குறுந்: 292
17. குறுந்: 292
18. குறள்: 504
19. புறம்: 291

புறநானூற்றில் 144, 145—ம் பாடல்களும், நற்றிணை 374—ம் பாடலும் வன்பரணரால் இயற்றப் பட்டனவோ அன்றிப் பரணரால் இயற்றப்பட்டனவோ என்று ஐயுறுமாறு அமைந்திருப்பதாகச் சிலர் கருதுவர். புறநானூற்றுப் பாடல்களில் 144—ம் பாடலின் அடிக் குறிப்பில் மட்டும் வன்பரணர் என்னும் பிரதிபேதம் உண்டு. ஈண்டும் பெரும்பான்மைப் பதிப்பாசிரியர்கள் இப்பாடலின் ஆசிரியரைப் பரணரென்றே குறித்துள் ளனர். புறநானூறு 145—ன் அடிக்குறிப்பில் பிரதிபேத மில்லாமல் பரணரென்றே காணப்படுகின்றது. இதனைப் பிறர் பாடலாகக் கருதுதற்கு யாதொரு சான்றுமில்லை. ஒரு பொருள் குறித்தே இரு பாடல்கள் ஒரு புலவரால் இயற்றப் பெறுதலிலும் அசம்பாவிதம் யாதொன்று மில்லை. நற்றிணை 374—ம் பாடல் அதனைப் பதிப்பித்த பின்னத்தூர் நாராயணசுவாமி ஐயரால் வன்பரணரால் இயற்றப்பட்டதாகவே சுவடிச் சான்றுகள் கொண்டு குறிக்கப்பட்டுள்ளது. ஆதலால், இம்மூன்று பாடல் களின் ஆசிரியர்கள் யாவர் என்று நிறுவுதலில் இடர்ப் பாடொன்றுமிலது. குறுந்தொகை 259—ம் பாடலைக் கபிலர் பாட்டாகச் சிலர் கருதுவர். ஆயினும் உ.வே சுவாமி நாதஐயரின் குறுந்தொகைப்பதிப்பில் இப்பாடல் பரணர் பாட்டாகவே சேர்க்கப்பட்டுள்ளது. அன்றியும் அதனைப் பரணர் பாட்டன்று என்று நீக்கிவிடப் பிரதி பேதங்களோ அகச்சான்றுகளோ இன்மையால் இந்நூலில் அஃது இடம் பெறுகின்றது.

பரணதேவ நாயனார் என்று இடைக் காலத்தெழுந்த ஒரு புலவர் 101 வெண்பாக்களில் 'சிவபெருமான் திரு வந்தாதி' யொன்று இயற்றினார். கபில தேவ நாயனார் என்று வேறொரு புலவர் 100 பாடலில் பிறிதொரு 'சிவபெருமான் திருவந்தாதி'யை இயற்றினார். இவ்விரு திருவந்தாதிகளும் பதினோராம் திருமுறையில் சேர்க்கப் பட்டுள்ளன. பரணதேவ நாயனாரின் திருவந்தாதியின் இறுதிப் பாடல் 'பரணர் உரைத்த அந்தாதி' யென்று ஆளு தலால் அஃது பரணர் என்னும் பெயர்கொண்ட புலவ ரால் இயற்றப்பட்டது என்று கொள்ளப்படும். ஆனால்

101—ம் பாடலைப் பிறர் சேர்த்த பிற்சேர்க்கை யாகவும் கொள்ளலாம்.[20] அஃதெவ்வாறாயினும் பதினோராம் திருமுறையிற் கண்ட பரணதேவ நாயனார் சங்க காலப் பரணரினின்றும் காலத்தால் மிகப் பிற்பட்டவர் என்பதில் ஐயமின்று.

திருக்குறளின் இறுதியிற் சேர்க்கப்பட்டுள்ள திருவள்ளுவமாலை என்னும் பாடல்தொகையில் பரணர் பாடியதாக 'மாலும் குறளாய்' என்று தொடங்கும் வெண்பா ஒன்றுள்ளது. 'திருவள்ளுவமாலை' மிகப் பிற்காலத்தே யாரோ ஒருவரால் சங்கப் புலவர்கள் பெயரில் இயற்றப் பெற்றது என்பது இன்று யாவர்க்கும் ஒப்ப முடிந்தது. ஆதலால் மேற்கூறிய பாடலைச் சங்கப் புலவரான பரணர் இயற்றவில்லை என்பது போதரும்.

இடைக்காலத்தெழுந்த பன்னிருபாட்டியல் என்னும் நூலுள் பரணர் என்பார் ஒருவர் பாடியதாக முப்பத்தேழு சூத்திரங்கள் காணப்படுகின்றன. இவற்றின் தன்மையையும் நடையையும் காண்பார்க்கு இவை சங்கப் புலவரான பரணரால் இயற்றப்பெற்றவையல்ல என்பது எளிதில் விளங்கும். பரணர் என்னும் பெயருக்குப் பொருள் விளங்கவில்லை.

## 4. பரணர் பாடல்களில் நமக்குக் கிடைத்துள்ளவை

அகநானூற்றில் 34, குறுந்தொகையில் 17, நற்றிணையில் 12, புறநானூற்றில் 13, பதிற்றுப்பத்தில் 10 ஆக 86 பாடல்கள் பரணர் பாடல்களாக நமக்குக் கிடைத்துள்ளன.

அவையாவன:

1. அகநானூறு: 6, 62, 76, 116, 122, 125, 135, 142, 148, 152, 162, 178, 181,

---

20. தேவாரத்தில் சிறப்பாக சம்பந்தர் பதிகங்களில் ஆசிரியர் பெயர் குறித்து வரும் பதினோராம் பாடல்களைப் பற்றியும் இத்தகைய கருத்தொன்றுண்டு.

186, 196, 198, 208, 212. 222, 226, 236, 246, 258, 262, 266, 276, 322, 326, 356, 367, 372, 376, 386, 396. (34)

2. குறுந்தொகை: 19, 24, 36, 60, 73, 89, 120, 128, 165, 199, 258, 259, 292, 298, 328, 393, 399. (17)

3. நற்றிணை: 6, 100, 201, 247, 260, 265, 270, 280, 300, 310, 350, 356. (12)

4. புறநானூறு: 4, 63, 141, 142, 144, 145, 336, 341, 343, 348, 352, 354, 369, (13)

5. பதிற்றுப்பத்து: 41, 42, 43, 44, 45, 46, 47, 48, 49, 50 (10): ஆக 86 செய்யுட்கள்.

இவையாவுமே ஆசிரிய அடிகளால் இயன்றவை. இவற்றில் அகப்பாடல்கள் 63, புறப்பாடல்கள் 23, அகப்பாடல்களில் குறிஞ்சியில் 29-ம், மருதத்தில் 26-ம், பாலையில் 4-ம், நெய்தலில் 3-ம், முல்லையில் 1-ம் உள்ளன. ஆதலால் கபிலரைப் போலவே இவரும் குறிஞ்சிப் பாடல்களை அதிகமாகப் பாடியுள்ளார் என்க. இவருடைய புறநானூற்றுப் பாடல்களில் வரலாற்றுத் தலைவனின்றிப் பொதுப்படையாகப் பாடியவற்றுள் மகட்பாற் காஞ்சி என்னும் துறையில் பாடியவை பெரும்பான்மை (6); இப்பாடல்களில் ஒவ்வொன்றும் ஏதோ ஒரு மகள் மறுத்த வரலாற்று நிகழ்ச்சியை அடிப்படையாகக் கொண்டு எழுந்ததாகக் கூற இயலாது. இவை கற்பனை நிலையில் எழுந்த பாடல்கள்.

இவர் பாடல்களில் செங்குட்டுவன் மிகுதியாகப் புகழப்படுகிறான்; அதிலும் அவன் கடல் பிறக்கோட்டிய செய்தியே பலகாலும் கூறப்படுகின்றது. அகநானூற்று தொகைப் பாடல்களில் ஆதிமந்தி கதை, அன்னிமிஞிலி வரலாறு, ஆய் எயினன் வரலாறு முதலியவை பலமுறை கூறப்படுகின்றன. பேகன், ஓரி என்பாரும் இவரால்

புகழப்பட்டனர். கண்ணகி சார்பில் இவர் பாடிய பாடலால் இவரது இரக்கத் தன்மையும், பலமுறை வரலாற்றுச் செய்திகளைக் கூறுதலால் இவரது வரலாற்று உணர்ச்சியும் இவரது பாடற் சிறப்பால் கல்விச் சிறப்பும், கரிகாலன், மறப்போர்ச் செழியன், செங்குட்டுவன், ஓரி, பேகன் ஆகியோரை வரையாது பாடினமையால் இவரது பொது நோக்கும் விளங்கும்.

பதிற்றுப்பத்தில் ஐந்தாம் பத்தின் இறுதியிலுள்ள பதிகம் பரணர் பாடியதன்று, சிறிது பிற்காலத்தவர் ஒருவரால் பாடிச் சேர்க்கப்பட்டது என்று கோடலே சிறப்புடைத்து. ஏனெனில், அப்பதிகத்தின் இறுதியில் 'பரணர் பாடினுர் பத்துப்பாட்டு' என்று படர்க்கை வாய்பாட்டால் கூறப்பட்டுள்ளது. அன்றியும் அப்பதி-கத்தின் இறுதியில் 'கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் ஐம்பத்தையாண்டு வீற்றிருந்தான்' என்று கூறுதலின் செங்குட்டுவனுக்குப் பிற்காலத்தெழுந்த ஒரு புலவரால் இப்பதிகம் இயற்றப்பட்டது என்பது காண்க. பரணர் செங்குட்டுவனது வடநாட்டுச் செலவிற்கு முன்பே இறந்து பட்டாரென்று மேலே கண்டோம். பதிற்றுப் பத்தை முதலில் பதிப்பித்த உ. வெ. சுவாமிநாதஐயர் 'பதிகங்கள் உரைப் பிரதிகளில் மாத்திரம் காணப்படு தலின் அவற்றை இயற்றினுேர் நூலாசிரியரோ தொகுத் தோரோ அல்லர் என்பது தெரிகின்றது' என்பர். இம் முடிவு ஏற்றுக்கொள்ளத் தக்கதே.

இவர் பாடிய பாடல்களில் பதிற்றுப்பத்து 43-ம் பாடல் 36 வரிகளும் குறுந்தொகை 120, 399-ம் பாடல்கள் 4 வரிகளும் கொண்டவை. ஆதலால் இவர் பாடல்களின் அடிகளின் பெருமை 36 சிறுமை 4 என்று கொள்க. இவர் பாடிய பாடலின் மொத்த வரி எண்: 1270. இவர் பாடல்களில் புறநானூறு 341 ஓரளவும் 352 மிகுதியும் சிதைந்து காணப்படுகின்றன. இவரது பிற பாடல்கள் யாவையும் முழுமையாகக் கிடைத்து உள்ளன. ஆயினும் பரணரால் இயற்றப்பெற்றுத் தொகை நூல்களைத் தொகுத்தவர்களால் சேர்க்கப்படாமல் விடு பட்டவை எத்துணையோ அறியோம்.

## 5. பரணர் பாடல்களில் கண்ட வரலாற்றுக் குறிப்புக்கள்

குறுந்தொகை:

19. வேள் எவ்வி இறந்தமையும் யாழ்ப்பாணர் வறுமை யுற்றமையும்.

73. நன்னனது காவல்மரமான நறுமாவினைக்கொன்று அவனது நாட்டிற் போகிய ஒன்று மொழி கோசர் வன்கட் சூழ்ச்சி செய்தனர்.

89. பெரும்பூட் பொறையன் (சேரன்) கொல்லிமலையின் மேற் பக்கத்தில் அம்மலையிலுள்ள தெய்வத்தை வரைந்தனன்.

128. தொண்டி முன்றுறை திண்தேர்ப் பொறைய னுடையது.

199. ஓரி என்பான் திண்ணிய தேரினையும் கைவண் மையும் உடையன்.

258. சேந்தனுடைய தந்தையாகிய அழிசி என்பானு டையது ஆர்க்காடு.

292. நன்னன் என்பானது தோட்டத்து மாங்காயொன்று ஆற்றிலே மிதந்து வரக்கண்ட பெண் ஒருத்தி அதனைத் தின்ற 'குற்ற'த்திற்காக அவன் அவளுக்குக் கொலைத்தண்டம் விதித்தான். அவள் தந்தை அவளது நிறைக்கு ஒத்த பொற்பாவையையும், 81 களிறுகளையும் தண்டமாகத் தர ஒப்பியும் அதைக் கேளாத நன்னன் அப்பெண்ணைக் கொல் லுவித்தான்.

298. அகுதை என்பான் அகவன் மகளிர்க்குப் பிடிகளைப் பரிசில் அளித்தான்.

328. விச்சியர் பெருமகன் வேந்தர்களோடு போர்புரிந்த காலத்தில் குறும்பூர் என்னும் ஊரினர் பெரிதும் ஆர்த்தனர்.

393. வாகை என்னும் போர்க்களத்தில் பசும்பூட்பாண்டியனது அதிகாரியான அதிகன் தனது யானையோடு பட்டான். அப்பொழுது அவனை வென்ற கொங்கர் வெற்றியால் பெரிதும் ஆர்த்தனர். (கொங்கருக்கும் பசும்பூட் பாண்டியனுக்கும் பகை உண்டு என்பது அகம் 253 (நக்கீரர்) ஆல் பெறப்படும். அகம் 125லும் பரணர் வாகைப் பறந்தலையைப் பற்றிக் கூறுவர்.)

நற்றிணை:

6. ஓரியின் காட்டினைப் புகழ்ந்தமை.

100. மலையமான் அவையில் கூத்தர் மத்தளத்தினை முழங்குதல்.

260. பகைவரை வென்ற செவ்வேல் வயவனுக்கு (இவன் விரான்) புனல் வாயிலை அடுத்த இருப்பையூர் உரியது.

265. மிஞிலி என்பான் பாரம் என்னும் ஊரைப் பாது காத்தான். சோழன் ஆரேற்றினை உடையவன். ஓரி என்பவனுடையது கொல்லிமலை.

270. நன்னன் என்பான் வேந்தரை வென்று அப்பகை யரசரின் உரிமை மகளிரைப் பற்றி வந்து அவர் தலையை மழித்து அக்கூந்தலைக் கயிறுகத் திரித்து அக்கயிற்றாலே அப்பகைவரின் யானையைப் பிணித்த கொடுமை கூறியது.

280. தொன்று முதிர் வேளிர்க்குக் குன்றூர் உரியது.

300. தழும்பன் என்பானுக்கு ஊணூர் உரியது.

350. விரான் என்பானது இருப்பையென்னும் ஊர்.

அகநானூறு:

(அகநானூற்றிலேயே மிக அதிகமான அதாவது 34 பாடல்களைப் பாடியவர் பரணர்.)

6. கற்புடைய மகளாகிய ஐயை என்பாளுடைய தந்தை தித்தன். அவனுக்குரியது உறந்தை யென்னும் ஊர். மத்தி என்பானுடைய ஊர் கழார்.

62. பொறையனுடைய கொல்லி மலையில் கடவுள் எழுதிய பாவை உண்டு.

76. அகுதை என்பான் தனது அவைக்கண் பொரு நர்க்குக் களிற்றுடன் நன்கலன் ஈபவன். ஆதிமந்தி என்பாள் காவிரியால் வவ்வப்பட்ட தனது காதலனை 'ஆட்டன் அத்தியைக் கண்டீரோ?' என்று யாங்கணும் வினவி மயங்கி வருந்தினள்.

116 மறப்போர்ச் செழியன் என்பான் கூடலில் சோழ, சேர அரசர்களுடைய பெரும் படையைத் தாக்கிப் புறங்கண்டனன்.

122. தித்தன் என்பானுடைய ஊர் உறந்தை.

125. கரிகால் வளவன் வாகையென்னும் போர்க்களத்தில் ஒன்பது மன்னர்களைப் பொருது வென்றனன்.

135. ஆதிமந்தி தன் காதலனைப் பிரிந்து, அறிவிழந்து நின்றனள். கழுவுள் என்பானுக்குரியது காமூர் என்னும் ஊர். அதனை 14 வேளிர் ஒரு முறை தாக்கினர்.

142. மாந்தரம் பொறையன் கடுங்கோ என்னும் சேர மன்னன் வறியோர்க்கு வரையாது ஈந்தனன். நன்னன் என்பானுடைய பாழி என்னும் ஊரில் ஒரு பேய் இருந்தது. அதற்கு உணவளித்தற்கு மிஞிலி என்பான் ஏற்றுக்கொண்டான். (அதாவது போர்க்களத்தே கொன்று குவித்துப் பேய்க்கு ஊட்டினன் என்க.) அப்போரில் அதிகன் என்பானை மிஞிலி கொன்றான்.

148. ஆய் எயினன் என்பான் மிஞிலி என்பானோடு போர் புரிந்து களத்தில் இறந்தான். தித்தன் வெளியன் என்பானுடையது கானலம் பெருந்துறை

என்னும் பட்டினம். அங்கு வந்த மரக்கலங்கள் பொன்னைக் கொணர்ந்தன. பிண்டன் என்பான் பகையை வெல்லும் வலிமிக்கவன். நன்னன் பாரம் என்னும் ஊருக்கு உரியன். அவனுடைய பாழி என்னும் மலை ஏழில் என்னும் பெரிய மலையைச் சார்ந்தது. வலிய வில்லையுடைய வீரர்களுக்குத் தலைவன் நள்ளி. பரிசில் வேண்டுவோர் யாவராயினும் அவர்க்கு மிடாச் சோற்றை அளிப்பான் ஆய்; அவனுக்கு உரியது தலையாறு என்னும் ஊர்.

162. அதிகன் என்பான் இரவலர்க்கு அவர் எண்ணி யாங்கு ஈபவன். அவன் பசும்பூட் பாண்டியனை ஒருமுறை வென்றனன்.

181. மிஞிலி ஆய் எயினனைப் போர்க்களத்தே கொன்றனன்.

186. பழையன் காவிரி நாட்டில் உள்ள போர் என்னும் ஊருக்கு உரியவன். (போர் என்னும் ஊரைப் பேர் எனல் நற்றிணை 10-ல் பிரதிபேதம்)

196. அன்னி மிஞிலி என்பாள் தன்னுடைய தந்தையின் கண்களை அழித்த கோசர்களைத் திதியனுடைய ஊரான அழுந்தூர் என்னுமிடத்தில் கொல்லு வித்தாள். (அத்தியன் குறும்பியன் எனவும் படுவான். குறும்பியன் திதியன் என்னும் இருபெயர் களும் ஒருவனையே குறிக்கும் என்பது அகம் 262 ஆல் பெறப்படும். ஆயினும் அகநானூற்றிற்கு உரை வகுத்த ந. மு. வேங்கடசாமி நாட்டார், ஆர். வெங்கடாசலம் பிள்ளை என்பார் குறும்பியன் வேறு திதியன் வேறு என்று பொருள்படும்படி இப்பாடலின் உரையில் கூறுவர். 262-ம் பாடலின் உரையில் அவர்களே இதனை மாற்றிக் கூறுதலும் காண்க.)

198. தெற்கேயுள்ள ஆய் என்பானுடைய நாட்டில் கவிரம் என்பதொருமலை.

208. வெளியன் வேண்மான் ஆய் எயினன் என்பவன் பாழி என்னும் போர்க்களத்தில் நன்னனது நண்பனை மிஞிலியோடு பொருது வீழ்ந்தான். அப்பொழுது எயினனது வேளிர் மனைவியர் இட்ட பூசலைக் கேட்டு அகுதை என்பான் அவர்களுடைய வருத்தத்தைக் களைந்தான். (வெளியன் வேண்மான் ஆய் எயினன் என்பது வெளியன் வேண்மானது மகனாகிய ஆய் எயினன் என்றேனும், வெளியன் வேண்மானாகிய ஆய் எயினன் என்றேனும் பொருள்படும்.) ஓரியினது கொல்லி மலை.

212. குட்டுவன் வேற்படையிற் சிறந்தவன் (வேல் கெழு குட்டுவன் என்ற பெயரும் காண்க); அவன் கடல் பிறக்கிடும்படியாகத் தனது பகைவர்களைக் கடற் போரில் வென்றவன்.

222. ஆதி மந்தியின் காதலனான ஆட்டன் அத்தியைக் கழார் என்னுமிடத்தில் ஒரு விழாவின் கண் காவிரி ஆறு ஈர்த்துச் சென்றது. ஆதலால் அவன் காதலி அவனை எங்குந் தேடி மதி மயங்கினாள். அந்நிலையில் மருதி என்பாள் காவிரி ஆற்றால் கொணரப் பெற்ற ஆட்டன் அத்தியின் உடலைக் கடலிற்புக்கு மேலே கொணர்ந்து ஆதிமந்திக்குக் காட்டி அம்முயற்சியில் தன் உயிரை நீத்தாள்.

236. காதலனை இழந்த ஆதிமந்தி ஆட்டன் அத்தியைக் கண்டீரோ என்று நாடுதொறும் ஊர்தோறும் சென்று வருந்துவாள் ஆயினள்.

246. கரிகாலன் வெண்ணி வாயில் என்னுமிடத்தில் பதினொரு வேளிரையும் சேர, பாண்டியரையும் வென்றபோது அழுந்தூர் என்னுமிடத்தில் பேராரவாரம் எழுந்தது. (கரிகாலன் அழுந்தூர் வேளிடை மகட் கொண்டமை ஈண்டுக் கருதற் பாலது).

258. நன்னன் உதியன் என்பானுடைய பாழி மலை அரிய காவலை உடையது. அதில் பழைய வேளிர் மிகுந்த பொன்னைப் பதுக்கி வைத்தனர்.

262. அன்னி மிஞிலி என்பாள் தன் தந்தையின் கண்களைக் களைந்த கோசர் மீது சினமுற்று 'கலத்தும் உண்ணுள், தூய உடையினை உடாள், சினத்தில் கொண்ட வடிவம் மாருள்' ஆகிப் போரில் வல்ல திதியன் என்பவனைக் கொண்டு கோசரைக் கொல்லுவித்துச் சினம் மாறினுள். பேகன் என்பானுடைய மலை நறு நாற்றமுடையது.

266. எவ்வியினுடையது நீடூர். அவன் அரிமணவாயில் உறத்தூர் என்னும் ஊரில் பகைவரை வென்ருன். அப்போது தன்னுடைய படையாளர்க்குக் கள்ளுடன் கூடிய பெருஞ்சோற்றினை அளித்தான்.

276. ஆரியர் களிறுகளைப் பிணிக்கப் பிடிகளைப் பழக்கி வைத்தனர்.

322. திதியன் என்பானுக்கு வேற்படையும் தேர்ப்படையும் உண்டு.

326. அகன்ற தெருக்களை உடைய அட்ட வாயில் என்னும் ஊர்ப் புறத்தே அழகிய வயல்கள் இருந்தன. போர் என்னும் ஊருக்குத் தலைவனுன பழையன் சோழருடைய படைத் தலைவன்.

356. நன்னனது ஒரு பறம்புமலை. சோழருடைய மருகன் (மகன் அல்லது வழித்தோன்றல்) வல்லம் கிழவோன்; நல்லடி என்னும் பெயரினன்.

372. பாழி என்னும் மலைப் பக்கத்தேயுள்ள ஊரின்கண் பழைய வேளிர் மிகுந்த செல்வத்தை மறைத்து வைத்தனர். குதிரை மலைக்கு உரியனுன அஞ்சியினது போர் வீரர் ஆவினைக் கவர்ந்து வரும் போது துடி எறிந்தனர்.

376. கழார் என்னும் ஆற்றங்கரையில் கரிகாலன் காண அத்தியைக் காவிரி ஆறு கவர்ந்து சென்றது. குட்டுவனது மரந்தை என்பது ஓர் ஊர். (மாந்தை என்பதும் பாடம்)

386. பாணன் என்பான் மற்போரில் ஆரியப் பொருநனை வென்முன், அதைப் பார்த்துக் கணையன் என்பான் நாணினுன்.

396. நன்னன் புன்னுட்டில் உள்ளாரை வெகுண்டு எழுந்தான். அப்பொழுது ஆய் எயினன் பாழி என்னும் நகரிடத்தே நின்று புன்னுட்டினரை அஞ் சேல் என்று கூறி நன்னனுடைய நண்பனுன மிஞிலி யோடு பொருது உயிர் நீத்தான். ஆட்டன் அத்தி யைக் காவிரி ஆறு கொண்டு ஒளித்தது. ஒரு சேரன் ஆரியரை வென்று இமயத்தின் முகப்பில் விற்பொறியைப் பொறித்தான். தோற்ற பகைவர் களை இழுத்து வந்தான். அவனுடைய ஊர் வஞ்சி. (இங்குக் கூறப்பட்ட சேரன் நெடுஞ்சேரலாதன் அல்லது செங்குட்டுவன் ஆதல் கூடும். ஆயினும் நெடுஞ்சேரலாதன் என்று கூறுவதே சிறப்புடைத்து, செங்குட்டுவனது சாதனைக்கு முன் பரணர் இறந் தாராதலின். நெடுஞ்சேரலாதன் இவற்றைச் சாதித் தமைக்குப் பதிற்றுப்பத்து இரண்டாம் பத்துப் பதிகம் காண்க.)

புறநானூறு

4. இதில் சோழன் உருவப் பஃறேர் இளஞ்சேட் சென்னியைப் புகழ்ந்து பாடினுர். அச்சோழனின் வாள், வீரக்கழல், கேடயம், குதிரை, களிறு முதலி யன புகழப்பட்டன. உருவப்பஃறேர் தேரின் மீது பொலிவோடு தோன்றினுன். அவனது பகைவர் நாடு தாயில்லாத உண்ணுக் குழவியைப் போல் கதறிக் கூவிற்று.

63. இதில் நெடுஞ்சேரலாதனும், வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளியும் போர் என்னும் களத்தில் பொருது வீழ்ந்தாரைப் பரணர் பாடியது. அவர் அவ்வேந்தர் பொருது வீழ்ந்த களத்தினை விளக்க மாக வருணித்தார். ('வேந்தரும் பொருது களத்து ஒழிந்தனர்' என்று கூறினமையான் இது பெறப் படும்.)

141. வையாவிக் கோப்பெரும் பேகனைப் புகழ்ந்தது. அவன் மறுமை (புகழ்) நோக்கி ஈந்தவன் அல்லன், பிறர்வறுமை நோக்கி ஈந்தவன் என்றார்.

142. இதிலும் அவனை அவர் பாடினார், அவன் கொடை மடம் படினும் படை மடம் படான் என்று. (அவன் மயிலுக்குப் போர்வை கொடுத்தவன் ஆதலால் கொடை மடம் பட்டான். படைமடம் என்றது 'வீரர் அல்லாதார் மேலும், முதுகிட்டார் மேலும், புண்பட்டார் மேலும், மூத்தார் இளையார் மேலும் செல்லுதல்'.)

144. பேகனை அவனால் துறக்கப்பட்ட கண்ணகி காரண மாக அவர் பாடியது.

145. இப்பாடலிலும் கண்ணகிக்கு அருள் செய்யுமாறு பேகனைப் பரணர் வேண்டினார்.

336, 341, 343, 348, 352, 354: இவை மகட்பாற் காஞ்சி என்னும் துறையில் அமைந்தவை. இப் பாடல்களில் மகட்கொடை மறுத்தலால் மன்னர் களிடையே மாறுபாடு தோன்றுதலை விளக்குவார். இது மகள் மறுத்தலோடு தொடர்புடையது. இவற்றை முறையே புறப்பொருள் வெண்பாமாலை 84, 94-ம் வெண்பாக்களில் காண்க.

369. மறக்கள வழியும் ஏர்க்கள உருவகமும். மறக்கள வழி என்பது அரசனை உழும் வேளாளனாக மிகுத்துச் சொல்லுதல்; ஏர்க்கள உருவகமாவது போர்க்களத்தை ஏர்க்களமாக உருவகம் செய்தல். மறக்கள வழியைப் புறப்பொருள் வெண்பாமாலை 150-ம் வெண்பாவிலும் ஏர்க்கள உருவகத்தைத் தொல்காப்பியம் புறத்திணை இயல் 21-லும் காண்க

பதிற்றுப்பத்து:

41. சேரன் செங்குட்டுவன் கடலை உழந்தது கூறியது; அதாவது கடல் பிறக்கோட்டிய வென்றியைப் புலப்படுத்தியது.

42. இதிலும் அதனையே அவர் குறித்தது.

43. செங்குட்டுவனின் கொடைச்சிறப்பைக் கூறியது.

44. இதில் மோகூர் மன்னனை அருகை என்பான் பொருட்டு வென்றமை கூறியது. அன்றியும், மோகூர் மன்னனுன பழையன் என்பானுடைய முரசத்தைக் கைப்பற்றிக் கொண்டு அவனது காவல் மரமான வேம்பினது அடிமரத்தை வெட்டி முரசாக்கியதும் குறிக்கப்பட்டன.

45. அவன் கொடைச் சிறப்பும், படைச்சிறப்பும், கடல் பிறக்கிட்டதும் கூறியது.

46. இதில் செங்குட்டுவன் விறலியர்க்குப் பரிசில் அளித்தமையும் கடல் பிறக்கோட்டியமையும் கூறப் பட்டன.

47. இதில் அவனது கொடைத்திறமும், அக்கொடைக்கு வருவாயாகிய போர்க்கள வெற்றியும் கூறப் பட்டன.

48. சேரன் கடலோட்டிய செய்தி விளக்கப்பட்டது.

49. அவனது ஈகையும் அவன் மோகூர் மன்னனை வென்று அவன் நாட்டை அழித்தமையும் கூறியது.

50. சேரனது இன்பச் சிறப்பு விளக்கமுறுகின்றது.

**வரலாற்றுச் செய்தியாதொன்றும் காணப்படாத பாடல்கள்.**

நற்றிணை: 201, 247, 310, 356.
குறுந்தொகை: 24, 36, 60, 120, 165, 259, 399.
அகம்: 178, 367.
புறநானூறு: 336, 341, 343, 348, 352, 354, 369.

ஈதிவ்வாருக, பரணர் பாடல்களைப் பற்றிக் குறிப்பிட்ட எவருமே 'அவரது செய்யுள்கள் ஒவ்வொன்றிலும் ஏதேனும் ஒரு வரலாற்றுச் செய்தி கூறப்பட்டுள்ளது' என்று பொருள்பட எழுதியுள்ளனர். அஃது அற்றன்று என்பது மேற்குறிப்பால் விளங்கும்.

## 6. பரணர் காலத்து அரசியல் நிலை

பரணர் வாழ்ந்த காலம் கி.பி. முதல் நூற்றாண்டின் பிற்பகுதியும் இரண்டாம் நூற்றாண்டின் பெரும் பகுதியும் என்று மேலே கண்டோம். இக்காலம் கடைச்சங்க காலத்தின் மிக முக்கியமான பகுதியாகும். அது சோழன் உருவப்பஃறேர் இளஞ்சேட் சென்னி தொடங்கி கரிகாலன், வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளி, காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளி, இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன், ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் முதலிய முடிவேந்தர்களும், அதிகமான் நெடுமானஞ்சி, மலையமான் திருமுடிக்காரி, வையாவிக் கோப்பெரும்பேகன், நன்னன், ஓரி முதலிய குறுமுடிச் சிற்றரசர்கள் பலரும் வாழ்ந்த காலம். கரிகாலன், செங்குட்டுவன் ஆகிய இருவருமே இமயம் வரை சென்று புலிக்கொடியையும் விற்கொடியையும் அம்மலை முகப்பில் நிரலே பொறித்துவிட்டு வந்தவர்கள் என்பது தமிழிலக்கிய வரலாற்றில் கண்ட மரபு. அக்காலத்தே மதுரையில் அரசாண்ட நெடுஞ்செழியன் யாதோ ஒரு ஆரியப்படையை வென்ற காரணத்தால் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் என்னும் பட்டப் பெயர் எய்தினன். இவர்களில் கரிகாலன், ராஜசூயம் வேட்ட பெருநற்கிள்ளி, செங்குட்டுவன் என்போர் வேத வேள்விகள் இயற்றியும், பல புலவர்களால் போற்றப் பெற்ற போர்க்கள வெற்றிகளைக் கண்டும் பெரும் புகழ் எய்தியவர்கள். உருத்திரங்கண்ணனார் பட்டினப்பாலையையும், முடத்தாமக் கண்ணியார் பொருநர் ஆற்றுப்படையையும் கரிகாலன் மீது பாடினர்; ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் இளங்கோவடிகளால் மதுரைக் காண்டத்துள் பேசப்படும் பெருமை எய்தியவன்; செங்குட்டுவன் பதிற்றுப்பத்தின் ஐந்தாம் பத்தில் பரணரால் பாடப்படும் பெருமையையும், வஞ்சிக் காண்டத்தின் தலைவனாக விளங்கும் புகழ் நிலையையும் எய்தியவன். இத்தகைய பெரும் புரவலர்கள் ஆண்ட காலத்தில் அவர்களுடைய பெருமையையும் குன்றச்செய்யும் அளவிற்கு ஈகையாற் பெரும் புகழ் படைத்தவர்கள் அதிகமான், பேகன் முதலானோர். இவர்களில் முடிமன்னர் பண்டைக்காலம்

தொட்டு (குறைந்தது கி.மு. 4-ம் நூற்றுண்டிலிருந்து) தமிழகத்தை ஆண்டு வந்தவர்கள். அவர்களில் சோழர்கள் (புலிக்கொடி உடையவர்கள்) புகார், உறையூர் என்னும் இரு தலைநகரங்களிலிருந்தும் சோழநாட்டை ஆண்டவர்கள். கரிகாலன் காலத்திலிருந்து தொண்டை மண்டலமும் சோழ நாட்டின் பகுதியாயிற்று அவனுடைய பின் தோன்றல்களில் ஒன்பதின்மர் தம்முள்ளே பகைத்துச் சோழர் அரியணைக்குப் போட்டியிட்ட செய்தி சிலப்பதிகாரத்தால் விளக்கமுறும். நேரிவாயில் என்னுமிடத்தில் நடந்த போரில் ஒன்பது சோழரை வென்று ராஜசூயம் வேட்ட பெருநற்கிள்ளிக்குச் சோழ அரசினை எய்துவித்ததும் வேல் கெழுகுட்டுவனின் பல் பெரும் வெற்றிகளில் ஒன்றும். சேரவமிசமும் (விற்கொடியுடையது) தொண்டி, வஞ்சி என்னும் இரு தலைநகரங்களினின்றும் இரு கிளையாகப் பிரிந்து ஆட்சி செலுத்தியது. அவற்றுள் வஞ்சி என்பது திருச்சி மாவட்டத்தைச் சேர்ந்த கரூர் என்னும் நகரமேயாம். பாண்டியரும் (கயற்கொடியுடையோர்) மதுரை, கொற்கை என்னும் இரு தலைநகரங்களிலிருந்து ஆண்டனர். ஆரியப் படை கடந்த நெடுஞ்செழியனின் தம்பியான வெற்றிவேற் செழியன் கொற்கையினின்று ஆண்டவன். சோழருள்ளே புகார்ச் சோழர், உறையூர்ச்சோழர் என்னும் பிரிவுகள் தோன்றி குடிக்கலகங்கள் (family feuds) வலுத்தமை போல, சேரரிடையே வஞ்சிச் சேரருக்கும், தொண்டிச் சேரருக்கும் மாறுபாடுகள் தோன்றியது போல, பாண்டியர் குடியில் குறைந்தது ஐந்து கிளையினர் வெவ்வேறு தலை நகரங்களிலிருந்து ஆண்டனர் என்று தெரிகின்றது. அக் காரணத்தால் பாண்டியர்க்குப் பஞ்சவர் என்பதும் ஒரு பெயராயிற்று. இம்முடிமன்னர் தம்முள்ளே கலாம் விளைவித்துக் கொண்டதேயன்றி இவர்கட்கும் வேளிராகிய சிற்றரசர்கட்கும் இடையே பல போர்கள் நிகழ்ந்ததுமுண்டு. கோவலூரைச் சேர்ந்த மலையமான் திருமுடிக் காரி என்பான் சோழர்க்குப் படைத்தலைவனுயிருந்தான். ஒரு காலத்தில் பெருநற்கிள்ளி என்னும் சோழன் பகைவரால் நலிவுற்றிருந்தபோது அவனைத் திருமுடிக்காரியின் மகனுன திருக்கண்ணன் என்பான் காத்துதவினுன்.

காரிக்கும் தகடூரையாண்ட அதிகமானுக்கும் இடையே இருந்த பகை முற்றிப் போராகி அதிகமான் காரியை வெல்லும்படியாயிற்று. இறுதியில் சேரமன்னனான பெருஞ்சேரல் இரும்பொறை என்பான் தகடூரை முற்றி அதிகமானைக் கொன்று அவன் சிற்றரசைக் கைப்பற்றிச் சேர அரசைப் பரப்பிய செய்தியால் பெருநில மன்னர்க்கும், குறுநில மன்னர்க்கும் இடையேயும் ஓயாப்போர் நிகழ்ந்து வந்தமை புலனாகும். அரசியல் நிலையில் இக் குழப்பங்கள் தோன்றின. ஆயினும் சமூகத்தின் அமைதியும், வேளாண்மையின் சிறப்பும், வாணிபத்தின் பெருமையும் இந்நிலையால் பாதிக்கப்படவில்லை. மேல்பால் உள்ள கிரேக்க ரோமானிய நாடுகள், சீனம், யவம், முதலிய் கீழை நாடுகள் ஆகிய சேய்மை நாடுகளோடும், வட இந்தியா, ஈழம் முதலிய அண்மை நாடுகளோடும் தமிழகம் நடத்தி வந்த பயன்தரு வாணிபம் இந்நிலைக்கு முக்கிய காரணமாயிற்று. பெருவாரி மக்கள் ஏழ்மையில் மூழ்கியிருந்தாராயினும் (கோழியைத் துரத்தக் குழை கொண்டெறிதல் புலவர் கற்பனை என்க) நகர்ப்புறங்களிலும், அரசவையிலும், வணிக மக்களிடையேயும் செல்வச் சிறப்பு இருந்தது. இந்நிலையையே பொதுவாகச் சங்கப்புலவர் பாக்களிலிருந்து நாம் அறிகிறோம். ஆயினும் பரணர் வாயிலாக இதனை நன்கு அறிகிறோம்

அக்காலத்து மன்னர்கள் செங்கோலோச்சுவதின் பெருமையையும், கொடுங்கோலின் சிறுமையையும் நன்கு உணர்ந்திருந்தனர். இதை அறிந்தே கரிகாலன் செங்குட்டுவன் ஆகியோர் செங்கோலாச்சினர். ஆயினும் அறிந்து வைத்தும் தீமை புரிந்த நன்னன் போன்றாரும், ஆராயாமல் தவறிழைத்துவிட்டுக் கழிவிரக்கம் கொண்ட பாண்டியன் நெடுஞ்செழியனைப் போன்றோரும் அக்காலத்திருந்தனர். கற்புடைமனைவியைப் புறக்கணித்துவிட்டு வேறொருத்திபால் அன்பு செலுத்திய கதாநாயகனான கோவலனைப் போல, வையாவிக் கோப்பெரும் பேகன் தன் மனையாளான கண்ணகியைத் துறந்தமை பரணர் உள்ளிட்ட பெரும் புலவர்களின் பாடல்களால் விளங்குகிறது. இம்மன்னர்கள் புலவர்களை ஆதரித்தனர், தாமும்

ஓரளவு புலமை எய்தியிருந்தனர் என்பனவும் சங்கப் புலவர் வரலாற்ருல் தெரியவரும்.

## 7. பரணர் பாடல்களைப் பற்றிய சில இலக்கியக் குறிப்புக்கள்

பொதுவாகவே சங்கப் புலவர்கள் இடைக் காலப் புலவர்களைப் போலல்லாமல், சொல் நயத்தைவிடப் பொருள் நயத்தை மிகுதியாகப் போற்றியவர்கள்; அன்றியும் அவர்கள் எடுத்தாண்ட உவமைகள் இல்பொருள் உவமைகளாகவோ தற்குறிப்பேற்றங்களாகவோ பெரும்பாலும் அமையாமல் இயற்கையில் எளிதில் அனுபவத்தில் கண்டறிந்த உவமைகளும் செய்திகளுமாகவே தன்மை நவிற்சியாக அமைந்து கற்போர் உள்ளத்தில் கற்றமாத்திரத்தே இன்பம் பயப்பனவாம். அத்தகைய் புலவர்களில் தலைசிறந்தவர்களில் பரணரும் ஒருவர்.

"...... மிகு பெயல்
உப்புச்சிறை நில்லா வெள்ளம் போல
நாணுவரை நில்லாக் காமம்......"

(அகம்: 208)

என்னும் எடுத்துக் காட்டே இதற்குச் சாலும். இவ்வாறே

"ஊருண் கேணி யுண்டுறைத் தொக்க
பாசியற்றே பசலை காதலர்
தொடுவுழித் தொடுவுழி நீங்கி
விடுவுழி விடுவுழிப் பரத்த லானே"

(குறுந்: 399)

"வாள், வலந்தர மறுப்பட்டன..."

(புறம்: 4)

என்னும் பாடல்களில் வரும் உவமைகள் பலகாலும் படித்து இன்புறற்பாலன. ஆயினும் தற்குறிப்பேற்றங்களையும் இப்புலவர் அறியாமலில்லை:

"புனல் நயந்தாடும் அத்தி அணிநயந்து
காவிரி கொண்டொளித்தாங்கு..."

(அகம். 376)

என்புழிக் காவிரியைப் பெண்ணாக்கி, அத்தியின் அழகினைக் கண்டு அவள் அவனை விரும்பியதாகக் கூறிய நயம் காண்க. அன்றியும், மாமூலனார் பாடல்களிற் போல இவர் பாடல்களிலும் வரலாற்றுக் குறிப்புக்கள் பல காணப்படுகின்றன. அவற்றை அவர் அகப்பொருட்பாடல்களிலும் செறித்து வைத்துள்ளமைக்குத் தற்கால அறிஞர்கள் பெரிதும் கடமைப்பட்டுள்ளனர்.

சங்கப் பாடல்களில் செய்யுள் ஓசை நயம் போற்றப் பெற்றதாயினும், எதுகை மோனைகளை வற்புறுத்திப் போற்றினரில்லை; ஆயினும் பரணர் அந்நயங்களையும் போற்றியுள்ளார் என்பதை

"ஊரீர் போலச் சுரத்திடை யிருந்தனிர்
யாரீரோவென வினவலானா......
..........................
படாஅம் மஞ்ஞைக்கீத்தவெங்கோ
கடாஅயானைக் கலி மான் பேகன்"

(புறம். 141)

"முகை வனப் பேந்திய......
தகை வளர்ந்தெடுத்த......"

(புறம். 336)

என்னுமிடங்களிலும் பிறண்டும் காண்க.

களவொழுக்கத்தில் இரவுக்குறியின் இடையீடுகளை ஒருங்கே சேர்த்து ஒரே பாடலில் ஒன்றன்பின் ஒன்றாக அமைத்திருக்கும் அழகு அகம் 122ல் காணப்படும்.

பரணர் பாடல்களிற் சில இலக்கண ஆட்சிகள் நோக்கற்பாலன. தொல்காப்பியவிதிகளுக்கும் விலக்காகச் சில ஆட்சிகள் அமைந்திருத்தல் காணத்தகும். உதாரணமாக, தொல்காப்பியர், இரண்டாம் வேற்றுமையுருபு 'உயர்திணை மருங்கின் ஒழியாது வருதல்' வேண்டும் (தொல். தொகை. 15) என்று விதித்துள்ளார். ஆயினும் "வேந்தர் ஓட்டிய ஏந்து வேல் நன்னன்" (நற்.270) என்புழி 'வேந்தரை யோட்டிய' என்றபாலது உருபு தொக்கு நின்றமை காணப்படும். இவ்வாறு இலக்கியம் கண்ட

தற்கு இலக்கணம் காண விரும்பிய நன்னூலார் பிற் காலத்தே 'உயர்திணையிடத்து விரிந்தும் தொக்கும்' (நன். உருபு 16) என்று விதித்தார்.

அன்றியும் 'பனையும் சுரையும்' (தொல். உயிர்மயங். 81) என்னும் சிறப்பு விதிச் சூத்திரத்தால் 'பனந்திரள்' என்று புணரவேண்டியது பனைத்திரள் என்று பரணரால் ஆளப்படுகின்றது. 'பனைத்திரளன்ன பரேரெறுழ்த் தடக்கை' (அகம். 148) என்னும் ஆட்சி காண்க. இஃதே போல், "ஒருவரைக் கூறும் பன்மைக்கிளவி ......, வழக்கினுகிய உயர் சொற்கிளவி, இலக்கண மருங்கிற் சொல்லாறல்ல" (சொல். கிளவி. 27) என்று தொல் காப்பியர் விதித்திருக்கவும், பரணர்

'ஊரீர் போலச் சுரத்திடை யிருந்தனிர்
வாரீரோவென' (புறம் 141)

என்ருளுகின்ருர். இவையெல்லாம் சங்க காலத்திற்கு நெடு நாள் முன்பே தொல்காப்பியர் சூத்திரித்தார் என்பதையும், அவர்விதித்தவை சங்க காலத்தில் இலக்கிய மரபுகளால் மீறப்பட்டுவிட்டன என்பதையும் காட்டுகின்றன.

இவ்வாறே உவமவியல், செய்யுளியல் சூத்திரவிதி களிலும் சில கைவிடப்பட்டுப் பிற ஆட்சிகள் தோன்றும் இடங்களும், பரணர் பாடல்களிலேயேயன்றிப் பிற சங்கப் புவலர்கள் யாப்புக்களிலேயும் உள. உதாரணமாக, போல என்னும் உவம உருபு உருஉவமத்திற்கே பொருந்தும் என்று உவம இயல் 16-ல் தொல்காப்பியர் கூறினரா யினும்

'அந்தண் காவிரி போலக்
கொண்டு கைவலித்தல் சூழ்ந்திசின்'

(புறம்.

என்னுமிடத்திற் பரணர் வினையுவமமாக ஆண்டார். செய்யுளியல் 49-ல் 'சீர் கூனுதல் நேரடிக்கு உரித்தே'

என்ற சூத்திரப்படி, வஞ்சியடியாகிய குறளடியினும், சிந்தடியினும் சீர்கள் கூனாக வருதலின்று என்க. ஆயினும்

'மாவே, எறிபதத்தானிடங் காட்ட'
'நீயே, அலங்குளைப்பரிஇயிவுளி ...'

(புறம். 4)

என்னுமிடங்களில் சீர்கள் கூனாக வந்தன. இவ்வாறே பிறபல இடங்களிலும் இவர் பாடல்களில் அருமையான வழக்குக்களைக் காணலாம். இவற்றை யெல்லாம் வே. வேங்கடராஜுலு ரெட்டியார் முதலியோர் அரிதின் அராய்ந்து முன்பே விரிவாக எடுத்துரைத்துள்ளனர்.

## 1. அகநானூறு — 6. மருதம்

அரிபெய் சிலம்பின் ஆம்பலந் தொடலை
அரம்போ ழவ்வளைப் பொலிந்த முன்கை
இழையணி பணைத்தோள் ஐயை தந்தை
மழைவளந் தரூஉ மாவண் தித்தன்
பிண்ட நெல்லின் உறந்தை யாங்கண்
கழைநிலை பெறூஅக் காவிரி நீத்தங்
குழைமா ணொள்ளிழை நீவெய் யோளொடு
வேழ வெண்புணை தழீஇப் பூழியர்
கயநாடு யானையின் முகமனர்ந் தாஅங்கு
ஏந்தெழி லாகத்துப் பூந்தார் குழைய
நெருந லாடினை புனலே இன்றுவந்து
ஆக வனமுலை அரும்பிய சுணங்கின்
மாசில் கற்பின் புதல்வன் தாயென
மாயப் பொய்ம்மொழி சாயினை பயிற்றியெம்
முதுமை யெள்ளலஃ தமைகுந் தில்ல
சுடர்ப்பூந் தாமரை நீர்முதிர் பழனத்து
அந்தூம்பு வள்ளை ஆய்கொடி மயக்கி
வாளை மேய்ந்த வள்ளெயிற்று நீர்நாய்
முள்ளரைப் பிரம்பின் மூதரிற் செறியும்
பல்வேல் மத்தி கழாஅ ரன்னவெம்
இளமை சென்று தவத்தொல் லஃதே
இனிமையெவன் செய்வது பொய்ம்மொழி
யெமக்கே.

பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகற்குக் கிழத்தி கூறியது.

குறிப்பு: அரி:பரல்; தொடலை:மாலை; தொடுக்கப்படுவதா தலின். 'அ'வ்வளை:அ—அழகிய; பணை:மூங்கில் (போன்ற); பிண்டம்:குவியல்; கழை:ஓடக்கோல்; வெய்யோள்:விரும்பப் பட்டவள்; வேழம்:கரும்பு; புணை:தெப்பம்; கயம்:குளம்; சுணங்கு:தேமல்; மாயப்பொய்ம்மொழி:வஞ்சகச்சொல்; சாயினைபயிற்றி:வணங்கினையாய்ப் பலகாலும்கூறி; பழனம்: வயல்; தூம்பு:உள்தொளை; வாளை:மீன்வகை; வன்:கூர்மை; சுரை:தண்டு; அரில்:தூறு; தவ:மிகுதி குறித்தது; எவன்:எவ்

வாறு. 'மழைவளம் தரூஉம் ஐயை' என்று இயைப்பின் ஐயையின் கற்பின் சிறப்புக்கூறிற்று என்க.

பணைத்தோள்: உவமத்தொகை; 'பிண்டம்நெல்' என மாறுக. 'நீ வெய்யோள்' வேற்றுமை மயக்கம்; 'தொல்லஃது' ஆய்தம் விரித்தல்.

13 'மாசில் கற்பின் புதல்வன் தாய்' என்புழி அன்புவிளி போறறேன்றி முதுமையைக் குறித்த நயம் காண்க.

17 'வள்ளையாய் கொடிமயக்கி' என்பது 36:5ல் வருதல் காண்க.

## 2. அகநானூறு — 62 குறிஞ்சி

அயத்துவளர் பைஞ்சாய் முருந்தி னன்ன
நகைப்பொலிந் திலங்கு மெயிறுகெழு துவர்வாய்
ஆகத் தரும்பிய முலையள் பணைத்தோள்
மாத்தாட் குவளை மலர்பிணைத் தன்ன
மாயிதழ் மழைக்கண் மாஅ யோளொடு
பேயும் அறியா மறையமை புணர்ச்சி
பூசற் றுடியிற் புணர்புபிரிந் திசைப்பக்
கரந்த கரப்பொடு நாஞ்செலற் கருமையிற்
கடும்புனல் மலிந்த காவிரிப் பேரியாற்று
நெடுஞ்சுழி நீத்த மண்ணுநள்[1] போல
நடுங்கஞர் தீர முயங்கி நெருநல்
ஆகம் அடைதந் தோளே வென்வேற்
களிறுகெழு தானைப் பொறையன் கொல்லி
ஒளிறுநீ ரடுக்கத்து வியலகம் பொற்பக்
கடவுள் எழுதிய பாவையின்
மடவது மாண்ட மாஅ யோளே.

அல்ல குறிப்பட்டுழித் தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

---

1. பாடபேதம்: மண்ணுநீர்

(கு-பு) அயம்: நீர்; பைஞ்சாய்: ஒருவகைக் கோரை; முருந்து; குருத்து; நகை: ஒளி; துவர்:பவளம்; மாஇதழ்: கரியஇமை; மழை: குளிர்ச்சி; பூசல்: ஆரவாரம்; நீத்தம்: வெள்ளம்; மண்ணுநள்:குளிப்பவள்; நெருநல்:நேற்று; அஞர்: துன்பம்; முயங்கி: தழுவி; ஆகம்: உடல். வென்வேல்: வெல்லும்வேல்; அடுக்கம்: பக்கமலை; பாவை: கடவுள் உருவம் தீட்டிய ஒவியம்; மாயோள்: கரியள்.

துவர்வாய்: உவமத்தொகை; பேயும் அறியாமை என்றமையின் அதுவும் துஞ்சியபின் புணர்ச்சி நிகழ்ந்தது என்க. அடைதந்தோன்-தா-துணைவினை.

இச்செய்யுட்குத் 'தலைவன் தோழியை இரந்த'தாகக் கிளவி கூறுவர் நச்சினார்க்கினியர்.

10-11 உடல் சிலிர்த்தல் நீத்தத்திற் குளிராலும் ஆகத்தில் இன்பத்தாலும் என்க.

## 3. அகநானூறு — 76 மருதம்

மண்கனை முழவொடு மகிழ்மிகத் தூங்கத்
தண்டுறை ஊரனெஞ் சேரி வந்தென
இன்கடுங் கள்ளின் அஃதை களிற்றொடு
நன்கல னீயும் நாண்மகி ழிருக்கை
அவைபுகு பொருநர் பறையின் ஆனாது
கழறுப என்பவவன் பெண்டிர் அந்திற்
கச்சினன் கழலினன் தேந்தார் மார்பினன்
வகையமைப் பொலிந்த வனப்பமை தெரியற்
சுரியலம் பொருநனைக் காண்டி ரோவென
ஆதி மந்தி பேதுற் றினையச்
சிறைபறைந் துரைஇச் செங்குணக் கொழுகும்
அந்தண் காவிரி போலக்
கொண்டுகை வலித்தல் சூழ்ந்திசின் யானே.

தலைமகனை நயப்பித்துக் கொண்டாளென்று கழறக் கேட்ட பரத்தை தலைமகட்குப் பாங்காயினார் கேட்பச் சொல்லியது.

(கு-பு) மண்: மத்தளத்திற்குச் சுருதி கூட்டப்பயன்படுவது; மிருதங்கம் என்ற சொல்லில் 'ம்ருத்' மண் ஆதல் காண்க; கனை: செறிந்த; முழவு:மத்தளம்; தூங்க:ஆட, ஆனாது:ஒழியாது; அந்தில்:அசை, தெரியல்: மாலை; சுரியல்: குழன்ற மயிர்; இனைய: வருந்த; சிறை: (ஆற்றங்)கரை; பறைந்து: மோதி; உரைஇ: பரவி; செங்குணக்கு: நேர்கிழக்கு: வலித்தல்: பற்றுக் கோடல்; சூழ்ந்திசின்:எண்ணியுள்ளேன்:

3. 'இன்கடுங்கள்ளின் அஃதை' குறுந். 298: 5 காண்க இனிமை உண்ணும் போதும், கடுமை மயங்கும் போதும் என்க. விருந்தினர்க்குக் கள் அருந்தத் தருதல் அஃதையின் விருந்தோம்பல் இலக்கணம் போலும்; அவ்வையார் அதியமானைப் பற்றிப் புறம். 235: 1-3 கூறுதல் காண்க.

## 4. அகநானூறு — 116 மருதம்

எரியகைந் தன்ன தாமரை இடையிடை
அரிந்துகால் குவித்த செந்நெல் வினைஞர்
கட்கொண்டு மறுகுஞ் சாகா டளற்றுறின்
ஆய்கரும் படுக்கும் பாய்புன லூர
பெரிய நாணிலை மன்ற பொரியெனப்
புன்கவி ழகன்றுறைப் பொலிய வொண்ணுதல்
நறுமலர்க் காண்வருங் குறும்பல் கூந்தல்
மாழை நோக்கிற் காழியல் வனமுலை
எஃகுடை யெழினலத் தொருத்தியொடு நெருநை
வைகுபுனல் அயர்ந்தனை யென்ப அதுவே
பொய்புறம் பொதிந்தியாம் கரப்பவுங் கையிகந்து
அலரா கின்றால் தானே மலர்தார்
மையணி யானை மறப்போர்ச் செழியன்
பொய்யா விழவிற் கூடற் பறந்தலை
உடனியைந் தெழுந்த இருபெரு வேந்தர்
கடல்மருள் பெரும்படை கலங்கத் தாக்கி
இரங்கிசை முரசம் ஒழியப் பரந்தவர்

ஓடுபுறங் கண்ட ஞான்றை
ஆடுகொள் வியன்களத் தார்ப்பினும் பெரிதே.

தோழி தலைமகனை வாயில் மறுத்தது.

(கு-பு): எரி:நெருப்பு; அகைந்த:கப்புவிட்டு எரிந்த; வினைஞர்: ஈண்டு நெல்லரிவோர்; மறுகும்:திரியும்; சாகாடு:வண்டி; அளறு:சேறு; மன்ற—உறுதிகுறித்த இடைச்சொல்; புன்கு: ஒருவகைப்பூ; குறும்பல் கூந்தல்:குறியபலவாய கூந்தல்; ஐம் பாலாதலின் 'பல' என்றார். மாழை:மாவடு; காழ்:முத்துவடம்; ஒருத்தி:ஈண்டுப்பரத்தை; நெருநை:நேற்று; கை இகந்து:எமது செயலினையும் மீறி; மருள்:உவமஉருபு. இரங்கு: ஒலிக்கும்: அலர்:ஊரார் பேச்சு; ஆகின்று:ஆகின்றது.

## 5. அகநானூறு – 122. குறிஞ்சி

இரும்பிழி மகாஅரிவ்[1] வழுங்கல் மூதூர்
விழவின் றாயினுந் துஞ்சா தாகும்
மல்ல லாவணம் மறுகுடன் மடியின்
வல்லுரைக் கடுஞ்சொல் அன்னை துஞ்சாள்
பிணிகோ ளருஞ்சிறை அன்னை துஞ்சின்
துஞ்சாக் கண்ணீர் காவலர் கடுகுவர்
இலங்குவே லிளையர் துஞ்சின் வையெயிற்று
வலஞ்சுரித் தோகை ஞாளி மகிழும்[2]
அரவவாய் ஞமலி மகிழாது மடியிற்
பகலுரு வுறழ நிலவுக்கான்று விசும்பின்
அகல்வாய் மண்டிலம் நின்றுவிரி யும்மே
திங்கள் கல்சேர்பு கனையிருள் மடியின்
இல்லெலி வல்சி வல்வாய்க் கூகை
கழுதுவழங்கு யாமத் தழிதகக் குழறும்
வளைக்கட் சேவல் வாளாது மடியின்
மனைச்செறி கோழி மாண்குர லியம்பும்
எல்லா மடிந்த காலை யொருநாள்
நில்லா நெஞ்சத் தவர்வா ரலரே, அதனால்

---

1. மாரி; 2. மருளும்

அரிபெய் புட்டி லார்ப்பப் பரிசிறந்து
ஆதி போகிய பாய்பரி நன்மா
நொச்சி வேலித் தித்தன் உறந்தைக்
கன்முதிர் புறங்காட் டன்ன
பன்முட் டின்றால் தோழிநங் களவே.

தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லுவாளாய்த் தலைமகள் சொற்றது. தோழி சொல்லெடுப்பத் தலைமகள் சொல்லியதூஉமாம்.

(கு-பு): இரும்பிழி:மிக்க கள்; அழுங்கல்:ஆரவாரம். மல்லல்: வளப்பம். ஆவணம்:கடைத்தெரு. மறுகு:தெரு. மடிதல்:ஒலி அடங்குதல். பிணிகோள் அருஞ்சிறை:தன்னகத்தே அடக்கிக் கோடற்கண் வன்மையுடைய சிறைச்சாலை. இளையர்:வீரர். ஈண்டுக்காவலர்; பதிற்று 71:15; சிறுபாண்: 232 காண்க. வை:கூரிய; எயிறு:பல்; தோகை:வால். மயிலுக்குத்தோகை எனல், அதற்கு அது வாலாதல்பற்றியே என்க. ஞாளி:நாய். மகிழ்தல்:மகிழ்ச்சியோடு குரைத்தல். ஞமலி:நாய்; கல்:மலை; கூகை:ஆந்தை; கழுது:பேய். வளை:பொந்து; சேவல்:ஈண்டு கூகைச்சேவல். மாண்குரல்: வஞ்சப்புகழ்ச்சி. அரி:பரல். புட்டில்:சதங்கை, பரி:வேகம். ஆதி:கதிபேதம்; இதனை நச்சினார்க்கினியர் 'நெடுஞ்செலவு' என்பார். நொச்சி:மதில். யாமத்து:உம்மை தொக்கது.

## 6. அகநானூறு – 125. பாலை

அரம்போ ழவ்வளை தோள்நிலை நெகிழ
நிரம்பா வாழ்க்கை நேர்தல் வேண்டி
இரங்கா ழன்ன அரும்புமுதி ரீங்கை
ஆலி யன்ன வால்வீ தாஅய்
வைவா லோதி மையண லேய்ப்பத்
தாதுறு குவளைப் போதுபிணி யவிழப்
படாஅப் பைங்கட் பாவடிக் கயவாய்க்
கடாஅ மாறிய யானை போலப்
பெய்துவறி தாகிய பொங்குசெலற் கொண்மூ
மைதோய் விசும்பின் மாதிரத் துழிதரப்

பனியடூஉ நின்ற பானாட் கங்குல்
தமியோர் மதுகை தூக்காய் தண்ணென
முனிய அலைத்தி முரணில் காலைக்
கைதொழுத மரபிற் கடவுள் சான்ற
செய்வினை மருங்கிற் சென்றோர் வல்வரின்
விரியுளைப் பொலிந்த பரியுடை நன்மான்
வெருவரு தானையொடு வேண்டுபுலத் திறுத்த
பெருவளக் கரிகால் முன்னிலைச் செல்லார்
சூடா வாகைப் பறந்தலை யாடுபெற
ஒன்பது குடையும் நன்பக லொழித்த
பீடில் மன்னர் போல
ஓடுவை மன்னால் வாடைநீ யெமக்கே.

**தலைமகன் வினைமுற்றி மீண்டமை யுணர்ந்த தோழி தலைமகட்குச் சொல்லியது.**

(கு-பு) போழ்:பிளக்கப்பட்ட; நிரம்பாவாழ்க்கை:முற்றுப் பெறாத இல் வாழ்க்கை. நேர்தல்: முற்றுவித்தல்; இரம்:ஒரு வகை மரம்; இதனை 'இர'என்பர். காழ்:வித்து; ஈங்கை:மர வகை; ஆலி:ஆலங்கட்டி; வால்:வெண்மையான; வீ:பூ; தாஅய்:தாவி; 'தாவ' எனும் பொருட்டு. வை:கூரிய; ஓதி: ஓணான்; ஓந்தி என்பது இடைக்குறைந்தது; மை:கரிய; அணல்: தாடி; ஏய்ப்ப:ஒத்திட; படா:உறங்காத; பா அடி:பரந்த அடி; கயவாய்;பருத்தவாய்; பெய்து:பெய்தலால் என்று வினை யெச்சம் காரணப்பொருட்டு. கொண்மூ:மேகம். மாதிரம்: திசை. உழிதர:திரிய; தா-துணை வினை. பால் நாள்:நடுஇரவு; கங்குல்:இருள். மதுகை:வன்மை; தூக்காய்:ஆராயாய்.

செய்வினை:ஓதற்றொழில்; 'கடவுட் சான்ற செய்வினை' என்ற மையின் ஓதல்பெற்றும்.
இச்செய்யுள் வாடையை விளித்ததாக அமைந்தது.
முன்னிலை முன்னிற்றல். சூடாவாகை : வாகைப்பறந்தலை என்னும் போர்க்களத்திற்கு வெளிப்படை. ஆடு:வெற்றி. பீடு:பெருமை. மன்:மிகுதி குறித்தது. ஆல்:அசை.
'கைதொழு மரபிற்கடவுள் சான்றசென்றோர்,' 'செய்வினை மருங்கிற்சென்றோர்' என்று தனித்தனியேயுங் கொள்க. முன்னதற்குத்தலைவியால் தொழுதகையர் எனப்பொருள் காண்க.

## 7. அகநானூறு - 135. பாலை

திதலை மாமை தளிர்வனப் பழுங்கப்
புதலிவர் பீரின் எதிர்மலர் கடுப்பப்
பசலை பாய்ந்த நுதலே ஞகி
எழுதெழில் மழைக்கண் கலுழ நோய்கூர்ந்து
ஆதி மந்தியின் அறிவுபிறி தாகிப்
பேதுற் றிசினே காதலந் தோழி
காய்கதிர் திருகலிற் கனைந்துகால் கடுகி
ஆடுதளி ரிருப்பைக் கூடுகுவி வான்பூக்
கோடுகடை கழங்கின் அறைமிசைத் தாஅங்
காடிறந் தனரே காதலர் அடுபோர்
வீயா விழுப்புகழ் விண்தோய் வியன்குடை
ஈரெழு வேளிர் இயைந்தொருங் கெறிந்த
கழுவுள் காமூர் போலக்
கலங்கின்று மாதவர்த் தெளிந்தவென் னெஞ்சே.

தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட தலைமகள் தோழிக்குச் சொற்றது

(கு-பு) திதலை:தேமல்; மாமை:மாநிறம்; அழுங்க : கெட; புதல் இவர் : புதர்களிற்படற்கின்ற; பீர் : பீர்க்கு; பீரும் திதலையும் 'படரும்' என்க. எதிர் மலர்:புதுப்பூ. எழுதுஎழில்: ஓவியத்தில் வரையத்தக்க அழகு; மழை:குளிர்ச்சி; கலுழ:அழ; ஆதிமந்தியின் : ஆதிமந்திபோல. பேதுற்றிசின் : மயங்கியுள்ளேன். கதிர்:ஞாயிறு; திருகல்:தாக்குதல்; வான்:வெள்ளிய; கோடு:யானை மருப்பு அறை:பாறை; தாஅம்:பரவிக்கிடக்கும். வீயா:நீங்காத. கலங்கின்று:கலங்கிற்று; மாது:அசை.

ஆதிமந்தியைக் 'கரிகால்வளவன் மகள்' என்று பலரும் கூறினர்; இதற்குவரலாற்றுச் சான்று இன்று என்க. சீதையை இராவணற்கும், கண்ணகியைப் பாண்டியற்கும் 'மகள்' என்ப தொருமரபு; அவர்கள் அன்னூர் நாட்டிற்புக்கிருந்தனர் என்பது பற்றி; அவ்வாறே போலும் சோணுடுபுக்க சேரனை ஆட்டனத்தியின் காதலியையும் சோழன் மகள் என்றனர்.

## 8. அகநானூறு - 142. குறிஞ்சி

இலமல ரன்ன அஞ்செந் நாவிற்
புலமீக் கூறும் புரையோ ரேத்தப்
பலர்மேந் தோன்றிய கவிகை வள்ளல்
நிறையருந் தானை வெல்போர் மாந்தரம்
பொறையன் கடுங்கோப் பாடிச் சென்ற
குறையோர் கொள்கலம் போல நன்றும்
உவவினி வாழிய நெஞ்சே காதலி
முறையின் வழாஅ தாற்றிப் பெற்ற
கறையடி யானை நன்னன் பாழி
ஊட்டரு மரபின் அஞ்சுவரு பேஎய்க்
கூட்டெதிர் கொண்ட வாய்மொழி மிஞிலி
புள்ளிற் கேம மாகிய பெரும்பெயர்
வெள்ளத் தானை அதிகற் கொன்றுவந்து
ஒள்வா ளமலை யாடிய ஞாட்பிற்
பலரறி வுறுத லஞ்சிப் பைப்பய
நீர்த்திறள் கடுக்கு மாசில் வெள்ளிச்
சூர்ப்புறு கோல்வளை செறித்த முன்கைக்
குறையறு லன்ன இரும்பல் கூந்தல்
இடனில் சிறுபுறத் திழையொடு துயல்வரக்
கடல்மீன் துஞ்சு நள்ளென் யாமத்து
உருருகிள ரேர்வினைப் பொலிந்த பாவை
இயல்கற் றன்ன ஒதுக்கினள் வந்து
பெயலலைக் கலங்கிய மலைப்பூங் கோதை
இயலெறி பொன்னிற் கொங்குசோர் புறைப்பத்
தொடிக்கண் வடுக்கொள முயங்கினள்
வடிப்புறு நரம்பிற் றீவிய மொழிந்தே.

இரவுக்குறிவந்து நீங்குந் தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

(கு-பு) இலமலர்:இலவமலர்; புரையோர்:மேலோர்; பலர் மேந்தோன்றிய:பலருக்கும் மேற்பட்ட; பலர் கைக்கும் மேற் பட்ட கவிந்தகையினையுடைய எனலுமாம், இரப்போ கைர் கீழும் ஈவோர் கைமேலுமாதல் இயல்பாதலின். நிறை:நிறுத் ததல். குறையோர்:வறியோர். கொள்கலம்:பிச்சை ஏற்கும்

பாத்திரம். உவ:மகிழ்க. முறை:நீதிமுறை. ஆற்றி:(கடமையினைச்) செய்து; கறை:உரல் போன்ற; ஊட்டுதல்:பலியிடுதல். வாய் மொழி : ஈண்டுச் சூளுறை. ஞாட்பு:போர். சூர்ப்பு: வளைவு; கோல்:அழகிய; கோலம் என்பதன் ஈற்றுக் குறை. குறை அறல்:நீரற்ற மணல். சிறுபுறம்:முதுகின் மேற்பகுதி. துயல் வர:அசைய; வா:துணைவினை. இயல்: நடையின் தன்மை. ஒதுக்கு:நடை; பைப்பய:மெல்லமெல்ல. பெயல் : மழை; எறி: எறிய அல்லது சிதறப்படுதல். கொங்கு:தேன். சோர்பு: தெளித்து; தீவிய:இனிய; தொடி:வட்டம்; ஈண்டு கொங்கை.

ஒள்வாள் அமலை என்பது தும்பைத் திணையின் ஒரு துறை.

## 9. அகநானூறு - 148. குறிஞ்சி

பனைத்திர ளன்ன பரேரெறுழ்த் தடக்கைக்
கொலைச்சினந் தவிரா மதனுடை முன்பின்
வண்டுபடு கடாஅத் துயர்மருப்பு யானை
தண்கமழ் சிலம்பின் மரம்படத் தொலைச்சி
உறுபுலி யுரறக் குத்தி விறல்கடிந்து
சிறுதினைப் பெரும்புனம் வவ்வும் நாட
கடும்பரிக் குதிரை ஆஅய் எயினன்
நெடுந்தேர் மிஞிலியொடு பொருதுகளம் பட்டெனக்
காணிய செல்லாக் கூகை நாணிக்
கடும்பகல் வழங்கா தாஅங் கிடும்பை
பெரிதா லம்ம இவட்கே அதனால்
மாலை வருதல் வேண்டுஞ் சோலை
முளைமேய் பெருங்களிறு வழங்கும்
மலைமுத லடுக்கத்த சிறுக லாறே.

பகல் வருவானை இரவு வருகென்றது.

(கு-பு) பனைத்திரள்:திரள்பனை என மாறுக. பருஏர் எறுழ்தடகை:பருத்த அழகிய வன்மையுடைய அகன்ற கை. முன்பு: வலிமை. தொலைச்சி:ஒடித்துத்தள்ளி; உரற:கதற; விறல்: வெற்றி; கூகை:பகலில் வெளிச்செல்லக்கூசும் ஒரு பறவை, ஆந்தை; இடும்பை: துன்பம்; பகற் குறிக்கட் செல்ல இயலாத

துன்பம். மாலை:இரவுப்பொழுது. ஆறு:வழி. கூகைக்குப்பகலில் வெளிச் செல்ல இயலாமையால் நேரும் துன்பத்தைப் பகற் குறிக்கண் துன்பம் மிகும் தலைவியின் நிலைக்கு உவமித்தார். பனைத்திரள்:இது பனந்திரள் என்று தொல்காப்பியச் சூத்திர (தொல். உயிர்மயங்கியல் 81) விதியாற் புணரற் பாலது; ஆயினும் ஐகாரம் கெடாது வல்லெழுத்துப் பெற்று முடிந்தது இதனை ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள் 'கொடி முன்வரினே யையவணிற்பக், கடிநிலையின்றே வல்லெழுத்து மிகுதி' (தொல். உயிர்மயங். 83) என்பதன் இலேசால் முடிக்கலாம் என்று கூறுவர். ஆயினும் அஃது ஆசிரியர் கருத்தன்மை மேற்கூறிய 'பனையும் அரையும்' (உயிர்மயிங் 81) என்னும் சிறப்புச் சூத்திரத்தாற் பெறப்படும்.

## 10. அகநானூறு - 152. குறிஞ்சி

நெஞ்சுநடுங் கரும்படர் தீர வந்து
குன்றுழை நண்ணிய சீறூ ராங்கண்
செலீஇய பெயர்வோள் வணர்சுரி யைம்பால்
நுண்கோ லகவுநர்ப் புரந்த பேரிசைச்
சினங்கெழு தானைத் தித்தன் வெளியன்,
இரங்குநீர்ப் பரப்பிற் கானலம் பெருந்துறைத்
தனந்தரு நன்கலஞ் சிதையத் தாக்குஞ்
சிறுவெள் ளிறவின் குப்பை யன்ன
உறுபகை தரூஉம் மொய்ம்மூசு பிண்டன்
முனைமுர ணுடையக் கடந்த வென்வேல்
இசைநல் ஈகைக் களிறுவீசு வண்மகிழ்ப்
பாரத்துத் தலைவ னார நன்னன்
ஏழில் நெடுவரைப் பாழிச் சிலம்பிற்
களிமயிற் கலாவத் தன்ன தோளே
வல்வி லிளையர் பெருமகன் நள்ளி
சோலை யடுக்கத்துச் சுரும்புண விரிந்த
கடவுட் காந்த ளுள்ளும் பலவுடன்
இறும்பூது கஞலிய ஆய்மலர் நாறி
வல்லினும் வல்லா ராயினுஞ் சென்றோர்க்குச்
சாலவிழ் நெடுங்குழி நிறைய வீசும்
மாஅல் யானை ஆஅய் கானத்துத்

தலையாற்று நிலைஇய சேயுயர் பிறங்கல்
வேயமைக் கண்ணிடை புரைஇச்
சேய வாயினும் நடுங்குதுயர் தருமே.

இரவுக்குறி வந்து நீங்குந் தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

(கு-பு) நடுங்கு அரும்படர்:நடுங்குவதற்குக் காரணமான தாங்குதற்கு அரிய துன்பம்; வந்து:வந்துகூடி; செலீஇய: செல்ல; வணர்:வளைந்து; சுரி:சுருண்டு; அகவுநர்:பாணர்; அவர் கையது கோல்; இரங்குநீர்:ஒலிக்கும் நீர்ப்பரப்பு; கலம்:கப்பல்; இறவு:இறால் மீன்; குப்பை:தொகுதி; மொய்: வலிமை; மூசு:மிக்க; முனை முரண்:போர் செய்யும் மாறுபாடு; கலாபம்:தோகை; சுரும்பு:வண்டு; கடவுள் காந்தள்:கடவுட்கு அணிவிக்கத் தகும் காந்தள்பூ; இறும்பூது:வியப்பு; கஞலிய: மிக்க; பலவுடன் நாறி:பிற பல பூக்களோடும் சேர்ந்து வாசம் தந்து; சால்:மிடா; அவிழ்:சோறு; குழி:சோறேந்தும் மண்டை; மால்:பெரிய; வேய்:மூங்கில், கண்:கணு; புரை:போல; ஆயின் கானம் களிறு மிக்கது:''அண்டிரன், குன்றம் பாடின கொல்லோ, களிறு மிகவுடைய விக்கவின் பெறு காடே'' (புறம் 131) என்றார் ஆயைப்பாடிய ஏணிச்சேரி முடமோசி யாரும்.

## 11. அகநானூறு – 162. குறிஞ்சி

கொளக்குறை படாஅக் கோடுவளர் குட்டத்து
அளப்பரி தாகிய குவையிருந் தோன்றல
கடல்கண் டன்ன மாக விசும்பின்
அழற்கொடி யன்ன மின்னுவசிபு நுடங்க
கடிதிடி உருமொடு கதழுறை சிதறி
விளிவிடன் அறியா வானுமிழ் நடுநாள்
அருங்கடிக் காவல ரிகழ்பதம் நோக்கிப்
பனிமயங் கசைவளி யலைப்பத் தந்தை
நெடுநக ரொருசிறை நின்றனெ னாக
அறலென அவிர்வருங் கூந்தல் மலரென
வாண்முகத் தலமரு மாயிதழ் மழைக்கண்
முகைநிரைத் தன்ன மாவீழ் வெண்பல்

நகைமாண் டிலங்கு நலங்கெழு துவர்வாய்க்
கோலமை விழுத்தொடி விளங்க வீசிக்
காலுறு தளிரின் நடுங்கி யாஅது
நோயசா வீட முயங்கினள் வாய்மொழி
நல்லிசை தரூஉம் இரவலர்க் குள்ளிய
நசைபிழைப் பறியாக் கழல்தொடி அதிகன்
கோளற வறியாப் பயங்கெழு பலவின்
வேங்கை சேர்ந்த வெற்பகம் பொலிய
வில்கெழு தானைப் பசும்பூட் பாண்டியன்
களிறணி வெல்கொடி கடுப்பக் காண்வர
ஒளிறுவன இழிதரு முயர்ந்துதோன் றருவி
நேர்கொள் நெடுவரைக் கவாஅற்
சூரர மகளிரிற் பெறற்கரி யோளே.

இரவுக்குறிக்கண் தலைமகளைக்கண் ணுற்று நீங்கிய தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது

(கு-பு) கோடு:சங்கு; குட்டம்:ஆழம் - 'குள்' என்னும் பகுதியது. குவை:திரண்ட; இரும்:கரிய; தோன்றல:தோற்றத்தையுடைய; மாகவிசும்பு:ஆகாயம்; மாகமாகிய விசும்பு என்று இருபெயரொட்டாக்குக.

அழல்:தீ; மின்னு:மின்னல்; வசிபு:பிளந்து; உருமு:இடி; கதழ்:விரைந்த; உறை:நீர்; விளிவு:முடிவு; வான் உமிழ்: மேகம் பெய்யும்; இகழ் பதம்:கவனியாது இருக்கும் நிலை; வளி:காற்று; நெடுநகர்:நெடிதாய மாளிகை. வாய்மொழி: வாய்மை. நசை:விருப்பம்; கழல்:வீரர் காலில் அணிவது; தொடி:அக்கழல் கழலாதவாறு அணியப்படும் வளை. கோள்:காய்த்தல்; கோளறவு அறியா:பலன் தராமல் இருக்கும் நிலையை என்றும் அறியாத. காண்வர:அழகுபெற. ஒளிறுவன:பளிச்சிடுவன. வரைக்கவான்:மலைப்பக்கம். பெறுதற்கருமை, நெருங்குதற்கு அஞ்சவேண்டியமைபற்றி, சூரர மகளிர்க்கும் தலைவிக்கும் பொதுவாம். அறல்:கருமணல். அவிர்தல்:விளங்குதல்; மா:வண்டு; கருமைபற்றிய பெயர். வீழ்தல்:விரும்புதல்; நகை:புன்னகை; துவர் : பவளம்; துவர் போன்ற வாய் என்க. கோல்:அழகு; கோலம் என்பதன் கடைக்குறை. அசா:வருத்தம்; விட;நீங்க; ஆனது:அமையாது.

## 12. அகநானூறு - 178. குறிஞ்சி

வயிரத் தன்ன வையேந்து மருப்பின்
வெதிர்வே ரன்ன பரூஉமயிர்ப் பன்றி
பறைக்க ணன்ன நிறைச்சுனை பருகி
நீலத் தன்ன அகலிலைச் சேம்பின்
பிண்ட மன்ன கொழுங்கிழங்கு மாந்திப்
பிடிமடிந் தன்ன கல்மிசை யூழிழிபு
யாறுசேர்ந் தன்ன ஊறுநீர்ப் படாஅர்ப்
பைம்புதல் நளிசினைக் குருகிருந் தன்ன
வண்பிணி யவிழ்ந்த வெண்கூ தாளத்து
அலங்குகுலை யலரி தீண்டித் தாதுகப்
பொன்னுரை கட்டளை கடுப்பக் காண்வரக்
கிளையமல் சிறுதினை விளைகுரல் மேய்ந்து
கண்ணினிது படுக்கும் நன்மலை நாடனொடு
உணர்ந்தனை புணர்ந்த நீயும் நின்தோட்
பணைக்கவின் அழியாது துணைப்புணர்ந் தென்றுந்
தவலி லுலகத் துறைஇயரோ தோழி
எல்லையு மிரவு மென்னது கல்லெனக்
கொண்டல் வான்மழை பொழிந்த வைகறைத்
தண்பனி யற்சிரந் தமியோர்க் கரிதெனக்
கனவினும் பிரிவறி யலனே அதன்றலை
முற்றான் கண்ட ஞான்றினும்
பிற்பெரி தளிக்குந்தன் பண்பி னனே.

தோழி வரைவுமலிந்து சொல்லியது.

(கு-பு) வை:கூர்மை; மருப்பு:கொம்பு; ஏந்துமருப்பு என்றது கொம்பு மேனோக்கி இருத்தலால். வெதிர்:மூங்கில்; நீலம்: நீலமணி; பிண்டத்து அன்ன:உருட்டி வைத்தது போன்ற; மடிந்தன்ன : கிடந்தாலொத்த; ஊழ் இழிபு : ஒழுங்காக (முறையே) இறங்கிவந்து; படார்:சிறுதூறு; நளிசினை:அடர்த்தியான கிளைகள்; குருகு:நாரை. வண்பிணி:வளப்பம் பொருந்தியமுகை; கூதாளம்:செடிவகை. குலை:கொத்து; அலரி: மலர். உக:உதிர்தலால்; வினையெச்சம் காரணப்பொருட்டு. கட்டளை:உரைகல். காண்வர:அழகுபெறத் தோன்றி. அமல்: மிகுந்த. குரல்:கதிர். உணர்ந்தனை:ஊடிப்பின் அவ்வூடலி

னின்றும் நீங்கி. பணைக்கவின்:மூங்கில் போன்ற அழகு. துணை:துணைவனாகிய தலைவன். தவல்:கெடுதல்; தொழிற் பெயர். உறைஇயர் : தங்குவீராக. எல்:பகல்; கல்:ஒலிக் குறிப்பு. கொண்டல்:மேகம்; வான் மழை:மிகுந்த மழை. அற்சிரம்:முன்பனிக் காலம். தமியோர்:துணையை நீங்கித் தனித்திருப்போர்.

பன்றியின் கருநிற உடலின் மீது வெண்கூதாளத்துத் தாது உகுதலால், அவ்வுடல் தட்டாரின் கருநிற உறைகல் மீது பொன் படிந்திருப்பது போலத் தோற்றமளிப்பதாகக் கூறிய உவமை அறிந்து இன்புறற்பாலது.

தவலில் உலகத்துறைதலாவது ‘மறுமையுலகமும் மறுவின்றெய்துதல்’ (அகம் 66) பற்றி.

## 13. அகநானூறு – 181. பாலை

துன்னருங் கானமுந் துணித லாற்றாய்
பின்னின்று பெயரச் சூழ்ந்தனை யாயின்
என்னிலை யுரைமோ நெஞ்சே ஒன்னார்
ஓம்பரண் கடந்த வீங்குபெருந் தானை
அடுபோர் மிஞிலி செருவேல் கடைஇ
முருகுறழ் முன்பொடு பொருதுகளஞ் சிவப்ப
ஆஅய் எயினன் வீழ்ந்தென ஞாயிற்று
ஒண்கதி ருருப்பம் புதைய வோராங்கு
வம்பப் புள்ளின் கம்பலைப் பெருந்தோடு
விசும்பிடை தூர ஆடி மொசிந்துடன்
பூவிரி யகன்றுறைக் கனைவிசைக் கடுநீர்க்
காவிரிப் பேரியாற் றயிர்கொண்[1] டீண்டி
எக்க ரிட்ட குப்பை வெண்மணல்
வைப்பின் யாணர் வளங்கெழு வேந்தர்
ஞாலம் நாறும் நலங்கெழு நல்லிசை
நான்மறை முதுநூல் முக்கட் செல்வன்
ஆல முற்றங் கவின்பெறத் தைஇய

1. அயிர்கொ

பொய்கை சூழ்ந்த பொழில்மனை மகளிர்
கைசெய் பாவைத் துறைக்க ணிறுக்கும்
மகர நெற்றி வான்தோய் புரிசைச்
சிகரந் தோன்றாச் சேணுயர் நல்லிற்
புகாஅர் நன்னாட் டதுவே பகாஅர்
பண்டம் நாறும் வண்டடர் ஐம்பாற்
பணைத்தகைத் தடைஇய காண்பின் மென்தோள்
அணங்குசா லரிவை யிருந்த
மணங்கமழ் மறுகின் மணற்பெருங் குன்றே.

இடைச்சுரத்து ஒழியக்கருதிய நெஞ்சிற்குச் சொல்லியது

(கு-பு) துன்னுதல்:செல்லுதல்; துன் அரும்கானம்:அடைதற்கு அரியகாடு; துணிதல்:கடக்கத் துணிதல்; பெயர:மறுபடியும் திரும்பி வர; சூழ்தல்:கருதல்; உரைமோ : கூறுவாயாக. முருகு:முருகன்; உறழ்:போன்ற; முன்பு:வலிமை; ஒன்னார்: பகைவர்; ஓம்புதல்:பாதுகாத்தல்; வீங்குபெரும்:மீமிசைச் சொல். களம் : போர்க்களம்; உடைஇ : தோற்றுப் போய். உருப்பம்:வெப்பம்; புதைய : மறைய; வம்பப்புள் : புதிய பறவைகள். கம்பலை:ஒலி; தோடு:கூட்டம். தூர:மறையும்படி; ஆடி:வட்டமிட்டு; உடன்மொசிந்து : ஒன்றாகக்கூடி. அயிர்: ஆற்றங்கரை நுண்மணல்; எக்கர்:மேடு; குப்பை:குவியல்; 'வெண்மணல் குப்பை' என மாறுக. வைப்பு:இருப்பிடம். நல் இசை:குற்றமற்ற புகழ்; ஆலமுற்றம்:(பரந்த) ஆலமரத்தின் நிழல். இதனை 'ஆலமுற்றம் என்னும் ஊர்' என்பாருமுளர். கவின்:அழகு; தைஇய:இயற்றிய. பொய்கை:மானிடராக்கா நீர்நிலை; மனைமகளிர்:வீட்டின்கண் இருக்கும் பெண் குழந்தைகள். சிற்றிலிழைத்து விளையாடும் பருவத்தினராய மகளிர் எனலுமாம். கை: அழகு; பாவை:பொய்ம்மை இறுக்கும்:வந்துதங்கும். மகரநெற்றி:மகர உருவினை உச்சியிற் கொண்ட;புரிசை:மதில்; நல் இல்:நன்மாடங்களையுடைய மனை; மகாஅர் நல் நாடு:கடற்கரைத் துறைமுகப்பட்டினங்களை யுடைய சோழநாடு; புகார் என்னும் நகரத்தைத் தன்னகப் படுத்திய சோனாடு எனலுமாம். பகாஅர்:பகர்வார்; விலைகூறி விற்பார். பணை:மூங்கில். அணங்கு:அழகு; அரிவை:மகள்; ஈண்டுத்தலைவி. மறுகு:தெரு.

## 14. அகநானூறு - 186. மருதம்

வானம் வேண்டா வறனில் வாழ்க்கை
நோன்ஞாண் வினைஞர் கோளறிந் தீர்க்கும்
மீன்முதி ரிலஞ்சிக் கலித்த தாமரை
நீர்மிசை நிவந்த நெடுந்தா ளகலிலை
இருங்கயந் துளங்கக் காலுறு தோறும்
பெருங்களிற்றுச் செவியின் அலைக்கு மூரனொடு
எழுந்த கௌவையோ பெரிதே நட்பே
கொழுங்கோல் வேழத்துப் புணைதுணை யாகப்
புனலொடு கேண்மை யனைத்தே அவனே
ஒண்டொடி மகளிர் பண்டையாழ் பாட
ஈர்ந்தண் முழவின் எறிகுணில் விதிர்ப்பத்
தண்ணறுஞ் சாந்தங் கமழுந் தோள்மணந்து
இன்னும் பிறள்வயி னானே மனையோள்
எம்மொடு புலக்கு மென்ப வென்வேல்
மாரி யம்பின் மழைத்தோற் பழையன்
காவிரி வைப்பிற் போஒ ரன்னவென்
செறிவளை யுடைத்தலோ விலனே உரிதினின்
யாந்தன் பகையே மல்லேம் சேர்ந்தோர்
திருநுதல் பசப்ப நீங்குங்
கொழுநனுஞ் சாலுந்தன் னுடனுறை பகையே.

தலைமகட்குப் பாங்காயினார் கேட்ப இல்லிடைப் பரத்தை சொல்லி நெருங்கியது.

(கு-பு) வானம்:மழைபெய்தல்; 'வான் சிறப்பு' என்னும் ஆட்சி காண்க, வறன்:வற்கடம் (பஞ்சம்). நோன்:வலிமை யுடைய. ஞாண்:தூண்டிற்கயிறு. நோன் ஞாண் வினைஞர்: மீனவர். கோள்:கொள்ளுதல் தொழில்: மீன் இரையினைப் பற்றிக்கொண்டமை. ஈர்க்கும்:இழுக்கும். இலஞ்சி:நீர் நிலை. கலித்த:தழைத்த. நிவந்த:உயர்ந்த; தாள்:அடி; காம்பு. இரு: பெரிய: கயம்:குளம்; துளங்க:ஆட, அசைய; கால்:காற்று: கால் உறு தோறும்:காற்றடிக்கும் பொழுதெல்லாம்; செவியின்:காதினைப்போல. கௌவை:அலர்; ஊரார் கூறும் பழிச் சொல். தாமரையிலை அசைவது களிற்றின் காது அசைவது போன்றது என்க. கொழு:செழித்த; கோல் வேழம்:மூங்கில்;

புணை:தெப்பம். துணை:ஆதரவு. கேண்மை உறவு. 'புனலாடு தற்குத் தெப்பம் அப்போழ்தைக்குப் பயன்பட்டுப் பிறகு நீங்கிவிடுதல் போன்றது ஊரன் நம்மிடத்துக் கொண்ட நட்பு' என்க. இன்னும்:தொடர்ந்து. பிறள்வயினான்: சேரிப் பரத்தையர் வசமாயினான். மனையோள்;தலைவி; மழைத்தோல் பழையன்:(மேகம் போன்ற) கரிய கேடயத்தினையுடைய பழையன். காவிரி வைப்பின்:காவிரி நாட்டில் உள்ள. போஒர் அன்ன: போர் என்னும் ஊரினைஒத்த. இலன்: இல்லாதவன் ஆயினேன் என்றுதன்மை முற்றுவினை. பசப்பு எய்துமாறு. வெறுப்பும் சினமும் எய்தியக்கால் தம் வளையை யுடைத்தல் இல்மகளிர்க்கு இயல்பு என்க.

## 15. அகநானூறு - 196. மருதம்

நெடுங்கொடி நுடங்கு நறவுமலி பாக்கத்து
நாட்டுறைப் பட்ட மோட்டிரு வராஅற்
றுடிக்கட் கொழுங்குறை நொடுத்துண் டாடி
வேட்டமறந்து துஞ்சுங் கொழுநர்க்குப் பாட்டி
ஆம்ப லகலிலை யமலைவெஞ் சோறு
தீம்புளிப் பிரம்பின் திரள்கனி பெய்து
விடியல் வைகறை யிடூஉ மூர
தொடுகலங் குறுக வாரல் தந்தை
கண்கவின் அழித்ததன் தப்பற் றெறுவர
ஒன்றுமொழிக் கோசர்க் கொன்று முரண்போகிய
கடுந்தேர்த் திதிய னழுந்தைக் கொடுங்குழை
அன்னி மிஞிலியின் இயலும்
நின்னலத் தகுவியை முயங்கிய மார்பே.

பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகற்குக் கிழத்தி சொல்லியது.

(கு-பு) நுடங்கும்:அசையும்; நறவு:கள்; பாக்கம்:(பெரிய ஊரின் அருகில் உள்ள ஒரு) சிற்றூர்;பக்கத்தில் உள்ளது பாக்கம் என்க. நாள்:விடியற்காலை. துறைப்பட்ட:மீன் பிடிக்கும் துறையில் அகப்பட்ட. மோடு:அகடு. வரால்: மீன்வகை. குறை:துண்டம்; மீன் இறைச்சித் துண்டம் என்க. நொடுத்து:விற்று. வேட்டம் மறந்தது கள்ளுண்டு

ஆடியமையால். பாட்டி:பாண்மகள்; பாணன் என்னும் சொல்லின் பெண்பால். அமலே:திரண்ட. வெம்மை:விருப்பம் தரும்தன்மை. தொடுகலம்:தொட (தீண்ட) மாட்டேம். குறுக:நெருங்க. வாரல்:வரவேண்டேம். தெறுவர:அச்சம் உண்டாகுமாறு. ஒன்றுமொழி:கூறிய சொல் தவறாத. கோசர்க்கொன்று:கோசரைக்கொன்று. முரண்:பகைமை. அழுந்தை:அழுந்தூர். மிஞிலியின்:மிஞிலியைப் போல. நின் நலத் தகுவி:நினது எழில் நலத்திற்குத்தக்கவளாய பரத்தை. 'நின்நலத்தகுவி முயங்கிய மார்பைத் தொடுகலம்; வாரல்' என்று கூட்டுக.

இச்செய்யுளிற்கண்ட அன்னிமிஞிலி வரலாற்றை அகம். 262ம் செய்யுளிலும் காண்க.

## 16. அகநானூறு – 198. குறிஞ்சி.

கூறுவங் கொல்லோ கூறலங் கொல்லெனக்
கரந்த காமங் கைந்நிறுக் கல்லாது
நயந்துநாம் விட்ட நன்மொழி நம்பி
அரைநாள் யாமத்து விழுமழை கரந்து
கார்விரை கமழுங் கூந்தற் றூவினை
நுண்ணூ லாகம் பொருந்தினள் வெற்பின்
இளமழை சூழ்ந்த மடமயில் போல
வண்டுவழிப் படரத் தண்மலர் வேய்ந்து
வில்வகுப் புற்ற நல்வாங்கு குடச்சூல்
அஞ்சிலம் பொடுக்கி அஞ்சினள் வந்து
துஞ்சூர் யாமத்து முயங்கினள் பெயர்வோள்
ஆன்ற கற்பிற் சான்ற பெரியள்
அம்மா வரிவையோ வல்லள் தெனுஅது
ஆஅய் நன்னாட் டணங்குடைச் சிலம்பிற்
கவிரம் பெயரிய உருகெழு கவாஅன்
ஏர்மலர் நிறைசுனை யுறையுஞ்
சூர்மகள் மாதோ என்னுமென் னெஞ்சே.

புணர்ந்து நீங்கிய தலைமகளது போக்கு நோக்கிய தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

(கு-பு) கரந்த காமம்:நம்முள் மறைந்து வதியும் காமத்தினை; கூறுவம் கொல்:சொல்லுவோமோ; கூறலம் கொல்:கூறாதிருப்போமோ; என:என்று பல காலும் எண்ணி; கை நிறுக்கல்லாது முடிவில் அடக்க முடியாமல்; நம்பி:விரும்பி; விழு மழை கரந்து:பெய்யும் மழையில் மறைந்து...'அஞ்சினள் வந்து' என்று கூட்டுக. விழும்மழை:தன்னைமறைக்க உதவுதலால் தன்னால் விரும்பப்பட்ட மழை என்றும் கொள்க. விரை:மணம்; நுண்நூல்:நுண்ணிய நூலால் ஆயபுடவை. வில்வகுப்பு உற்ற:வில்லினைப் போலும் பகுதிகள் அமைந்த; நல்வாங்கு:நன்மைகூடிய; குடச்சூல் அம்சிலம்பு;குடம்போற் பக்கங்கள் புடைத்திருக்கும் அழகிய மலை. 'குடைச்சூல்' என்பதும் பாடமாம். சிலப்பதிகாரத்தில் 'பசும்பொற் குடைச்சூற் சித்திரச் சிலம்பு' என்று ஆளப்படுதல் காண்க. குடைச்சூல்:பக்கத்தில் தாழ்ந்திருத்தலால் குடைபோன்று புடைத்திருக்கும். துஞ்சூர்யாமத்து:ஊர்துஞ்சுயாமத்து என்று மாறுக. பெயர்வோள்:திரும்பச்செல்வோள். அம்மாஅரிவை:அழகியமாமை நிறத்தையுடைய பெண். அணங்கு:தெய்வம். கவான்:பக்கமலை; நேர்மலர்:மென்மையுடைய பூ. சூர்மகள்:சூரரமகள்.

## 17. அகநானூறு - 208. குறிஞ்சி

யாம இரவின் நெடுங்கடை நின்று
தேமுதிர் சிமையக் குன்றம் பாடும்
நுண்கோ லகவுநர் வேண்டின் வெண்கோட்டு
அண்ணல் யானை ஈயும் வண்மகிழ்
வெளியன் வேண்மான் ஆஅ யெயினன்
அளியியல் வாழ்க்கைப் பாழிப் பறந்தலை
இழையணி யானை இயல்தேர் மிஞிலியொடு
நண்பக லுற்ற செருவிற் புண்கூர்ந்து
ஒள்வாள் மயங்கமர் வீழ்ந்தெனப் புள்ளொருங்கு
அங்கண் விசும்பின் விளங்கு ஞாயிற்று
ஒண்கதிர் தெறாமைச் சிறகரிற் கோலி
நிழல்செய் துழறள் காணேன் யானெனப்
படுகளங் காண்டல் செல்லான் சினஞ்சிறந்து
உருவினை நன்னன் அருளான் சுரப்பப்
பெருவிதுப் புற்ற பல்வேண் மகளிர்
குரூஉப்பூம் பைந்தா ரருக்கிய பூசல்

வசைவிடக் கடக்கும் வயங்குபெருந் தானை
அகுதை களைதந் தாங்கு மிகுபெயல்
உப்புச்சிறை நில்லா வெள்ளம் போல
நாணுவரை நில்லாக் காமம் நண்ணி
நல்கினள் வாழியர் வந்தே ஓரி
பல்பழப் பலவின் பயங்கெழு கொல்லிக்
கார்மலர் கடுப்ப நாறும்
ஏர்நுண் ணோதி மாஅ யோளே.

புணர்ந்து நீங்குந் தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

(கு-பு) நெடுங்கடை நின்று: நீண்ட வாயிலில் நின்று; சிமையம்: உச்சி; கோல் அகவுநனர்: (பிரப்பங்) கோலைக் கையிற் கொண்டுள்ள பாடுநர்; அளி:அருள். இழை:யானை நெற்றியில் இடப்படும் ஓடை என்னும் அணி. புண்கூர்ந்து: புண் மிகுந்து. தெருமை:காய்தல் செய்யாவாறு; கோலி: பந்தலிட்டு; உழறல்:சுழன்று கொண்டிருத்தல்; படுகளம்: அவன் பட்டுக்கிடந்த போர்க்களம்; உருவினை:அச்சம் தரும் போர்ச்செயல். அருளான் கரப்ப:அருள் செய்யாமல் மறைந் திருக்க. விதுப்பு:விரைவு; குரு:விளக்கம். பைந்தார் அருக்கிய பூசல்:பசியமாலைகளை அழித்து விட்டு அழுது செய்த ஆரவாரம். வசைவிட:பழிநீங்க. களை தந்தாங்கு : நீங்கினாற்போல. ஏர்: அழகு; ஓதி:கூந்தல்; உப்புச்சிறை : உப்பிணாலாகிய அணை. நீரால் எளிதிற்கரைந்து விடுவது உப்பு, நாணு:நாணம்.

## 18. அகநானூறு - 212. குறிஞ்சி

தாவில் நன்பொன் தைஇய பாவை
விண்தவ ழிளவெயிற் கொண்டுநின் றன்ன
மிகுகவி னெய்திய தொகுகுர லைப்பாற்
கிளையரில் நாணற் கிழங்குமணற் கீன்ற
முளையோ ரன்ன முள்ளெயிற்றுத் துவர்வாய்
நயவன் தைவருஞ் செவ்வழி நல்யாழ்
இசையோர்த் தன்ன இன்தீங் கிளவி

அணங்குசா லரிவையை நசைஇப் பெருங்
களிற்று
இனம்படி நீரிற் கலங்கிய பொழுதிற்
பெறலருங் குரைய ளென்னாய் வைகலும்
இன்னா அருஞ்சுரம் நீந்தி நீயே
என்னை யின்னற் படுத்தனை மின்னுவசிபு
உரவுக்கார் கடுப்ப மறலி மைந்துற்று
விரவுமொழித் தகடூர் வேண்டுவழிக் கொளீஇப்
படைநிலா விலங்குங் கடல்மருள் தானை
மட்டவிழ் தெரியல் மறப்போர்க் குட்டுவன்
பொருமுரண் பெறாஅது விலங்குசினஞ் சிறந்து
செருச்செய் முன்பொடு முந்நீர் முற்றி
ஓங்குதிரைப் பௌவம் நீங்க வோட்டிய
நீர்மான் எஃகம் நிறத்துச்சென் றழுந்தக்
கூர்மத னழியரோ நெஞ்சே யானாது
எளிய ளல்லோட் கருதி
விளியா எவ்வந் தலைத்தந் தோயே.

அல்லகுறிப்பட்டு நீங்குந் தலைமகன் தன் நெஞ்சினை நெருங்கிச்[1] சொல்லியது.

(கு-பு) தாஇல்: கெட்டியாக இல்லாத; பொன்னைஇய பாவை: பொன்னாற்செய்யப்பட்ட பொய்ம்மை. கிளைஅரில் நாணல் கிழங்கு மணற்கு ஈன்ற:பலவாகக் கிளைத்த தூறாகிய நாணற்கிழங்கு மணலிடத்தே ஈன்ற; மணற்கு ஈன்ற:ஏழற்காக நான்கு வந்த வேற்றுமை மயக்கம். நயவன்:கலையில் வல்லவன். தைவரும்:விரல்களால் தடவி வாசிக்கும். அணங்கு: தெய்வம்; களிற்று இனம்படி நீரில்:யானைக்கூட்டம் படிதலால் கலங்கிய நீரைப்போல். பெறல் அருங்குரையள்:பெறுதற்கு அரியள். இன்னல்படுத்தனை:துன்பவழியில் செலுத்தினை. ஆனது:அமையாது. விளியாஎவ்வம்:நீங்காத துன்பம்.

## 19. அகநானூறு - 222. குறிஞ்சி

வானுற நிவந்த நீனிறப் பெருமலைக்
கான நாடன் உறீஇய நோய்க்கென்

1. நோக்கி

மேனி யாய்நலந் தொலைதலின் மொழிவென்
முழவுமுகம் புலராக் கலிகொ ளாங்கண்
கழாஅர்ப் பெருந்துறை விழவி னாடும்
ஈட்டெழிற் பொழிந்த ஏந்துகுவவு மொய்ம்பின்
ஆட்ட னத்தி நலனயந் துரைஇத்
தாழிருங் கதுப்பிற் காவிரி வவ்வலின்
மாதிரந் துழைஇ மதிமருண் டலந்த
ஆதி மந்தி காதலற் காட்டிப்
படுகடல் புக்க பாடல்சால் சிறப்பின்
மருதி யன்ன மாண்புகழ் பெறீஇயர்
சென்மோ வாழி தோழி பன்னாள்
உரவுரும் ஏற்றொடு மயங்கி
இரவுப்பெயல் பொழிந்த ஈர்ந்த ணாறே.

தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைமகட்குச் சொல்லியது.

(கு-பு) உற:பொருந்த; நிவந்த:உயர்ந்த; நீல் : நீல-கடைக் குறை; உறீஇய:அடைவித்த; உண்மேனி:என்றது தலைமகளின் மேனியை இதற்கு 'நோய்க்கென்மேனி' என்று பாடமோது வாருமுனர்; இது தோழி கூற்றாதலின், அவள் தலைவி உறுப்பைத் தன் உறுப்பாகக்கொண்டு உரைத்தாள் எனல் வேண்டும்; இதனைத் 'தாயத்தினடையா' என்னும் சூத்திர விதியால் அடக்குவர். (தொல் பொருளியல். 27). ஆய் நலம்: ஆய்ந்த அழகு; மொழிவென்:கூறுவேன். முழவு முகம் புலரா: முழவின் ஒலி மாறாத. ஆங்கண்:இடம் ஈட்டுஎழில்:திரண்ட அழகு; குவவு : திரண்ட; மொய்ம்பு : வலி; அதற்கிடமாகிய தோளிற்கு நின்றது; கதுப்பு:கூந்தல். வவ்வலின் : கவர்ந்து கொள்ளுதலின். மாதிரம்:திசை. துழைஇ: தேடி. அலந்த: வாடிய. ஆதிமந்தி காதலற் காட்டி:ஆதிமந்திக்குக்காதலனைக் காட்டி என்று விரிக்க. படுகடல் : ஒலிக்கும் கடல்; பெறீஇயர்:பெறுதற்பொருட்டு. சென்மோ:செல்வோமாக. உரவு: வலிய. உரும்:இடி; உரும்ஏறு:பேரிடி. ஆறு : வழி. சென்ம்: தன்மைப்பன்மை.

## 20. அகநானூறு – 226. மருதம்

உணர்குவெ னல்லென் உரையல்நின் மாயம்
நாணிலை மன்ற யாண ரூர

அகலு ளாங்கண் அம்பகை மடிவைக்
குறுந்தொடி மகளிர் குரூஉப்புனல் முனையிற்
பழனப் பைஞ்சாய் கொழுதிக் கழனிக்
கரந்தையஞ் செறுவின் வெண்குரு கோப்பும்
வல்வி லெறுழ்த்தோட் பரதவர் கோமான்
பல்வேல் மத்தி கழாஅர் முன்றுறை
நெடுவெண் மருதொடு வஞ்சி சாஅய்
விடியல் வந்த பெருநீர்க் காவிரித்
தொடியணி முன்கை நீவெய் யோளொடு
முன்னு ளாடிய கவ்வை யிந்நாள்
வலிமிகு முன்பிற் பாணனொடு மலிதார்த்
தித்தன் வெளியன் உறந்தை நாளவைப்
பாடின் தெண்கிணைப் பாடுகேட் டஞ்சிப்
போரடு தானைக் கட்டி
பொராஅ தோடிய ஆர்ப்பினும் பெரிதே.

தலைமகற்குத் தோழி வாயில் மறுத்தது.

(கு-பு) உணர்குவென் அல்லென்:பொருட்படுத்த மாட்டேன் மாயம்:வஞ்சம். யாணர் : புதுவருவாய். அகல்உள்:அகன்ற இடம். அம்பகை:அழகிய பகுப்புக்களை(மடிப்புக்களை) யுடைய. மடிவை:மடிப்புக்களையுடைய புடவை என்க. ஈண்டுத்தழை யுடை; முனையின்:வெறுத்தால்; பழனம்:பொய்கை; பைஞ்சாய்: கோரை வகை; கொழுதி:கோதி; ஓப்பும்:ஓட்டும். எறுழ்: வலிமையுடைய; மருதொடு வஞ்சி சாஅய்:மருதமரத்துடன் வஞ்சிமரத்தையும்சாய்த்து;நீவெய்யோளொடு:நின்னால்விரும் பப்பட்டவள் என்றது பரத்தையை. கவ்வை : அலர், ஊரார் பேச்சு. வலிமிகு முன்பு:மீமிசை; மலிதார்:இதனைத்'தார் மலி' என்று மாற்றுக. உறந்தை:உறையூர். தெண்கிணை:தெளிந்த கிணைப்பறை. பாடு:ஓசை, ஒலி, ஓடிய ஆர்ப்பு:ஓடிய காலத்து ஓடுதலால் பிறந்த ஆரவாரம்; அன்றி அதனைக்கண்டு, வென் றோர் நகைத்து எழுப்பிய ஆரவாரம்,

## 21. அகநானூறு - 236. மருதம்

மணிமருள் மலர முள்ளி யமன்ற
துணிநீ ரிலஞ்சிக் கொண்ட பெருமீன்
அரிநிறக் கொழுங்குறை வெளவினர் மாந்தி

வெண்ணெ லரிநர் பெயர்நிலைப் பின்றை
இடைநிலம் நெரிதரு நெடுங்கதிர்ப் பல்சூட்டுப்
பனிபடு சாய்ப்புறம் பரிப்பக் கழனிக்
கருங்கோட்டு மாஅத் தலங்குசினைப் புதுப்பூ
மயங்குமழைத் துவலையில் தாஅ மூரன்
காமம் பெருமை யறியேன் நன்றும்
உய்ந்தனென் வாழி தோழி யல்கல்
அணிகிளர் காந்தின் அம்பட் டிமைப்பக்
கொடுங்குழை மகளிரின் ஒடுங்கிய விருக்கை
அறியா மையின் அழிந்த நெஞ்சின்
ஏற்றிய லெழில்நடைப் பொலிந்த மொய்ம்பின்
தோட்டிருஞ் சுரியல் மணந்த பித்தை
ஆட்ட னத்தியைக் காணீ ரோவென
நாட்டி னுட்டின் ஊரி னூரிற்
கடல்கொண் டன்றெனப் புனலொளித் தன்றெனக்
கலுழ்ந்த கண்ணள் காதலற் கெடுத்த
ஆதி மந்தி போல
ஏதஞ் சொல்லிப் பேதுபெரி துறவே.

ஆற்றாமை வாயிலாகப் புக்க தலைமகன் நீக்கத்துக்கண் புக்க தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

(கு-பு) மணிமருள்:நீலமணிபோன்ற; மலர:மலரையுடையன; அமன்ற:நிறைந்த; துணிநீர்;தெளிந்த நீரினையுடைய; இலஞ்சி: மடு; அரி:வரி; குறை:மீன்துண்டம்; மாந்தி:உண்டு; பெயர் நிலை:நிலைபெயர் என்று மாறுக; பின்றை:பிறகு; இடன் இல: இலவாகிய இடம், அதாவது வெற்றிடம். சூட்டு:நெற்கதிர்க் கற்றை; பரிப்ப:சூழ; மாத்து:மாமரத்தினையுடைய. அலங்கும்: அசையும்; துவலை:மழைத்துளி. தாஅம்: தாவும்; பரந்திருக்கும்; மழைத்துளியாண்டும் பரத்தல் போல, தலைவன் ஊரெல்லாம் பரந்திருந்தான் என்க; அல்கல்:இராப்பொழுதில்; அணி:அழகு; பட்டு : பட்டாடை; மகளிரின் : மகளிரைப்போல; ஒடுங்கிய: நாணியிருந்த; கெடுத்த : கெட்டமையான். ஏறு : எருது; மொய்ம்பு:தோள்; தோடு:தொகுதி; மணந்த : பொருந்திய; பித்தை:தலைமயிர்; ஏதம்:துன்பம்; பேது:மயக்கம்; நன்றும்: நன்றாக; உய்ந்தனென்·பிழைத்தேன்.

## 22. அகநானூறு – 246. மருதம்

பிணர்மோட்டு நந்தின் பேழ்வா யேற்றை
கதிர்மூக் காரல் களவனுக[1]
நெடுநீர்ப் பொய்கைத் துணையொடு புணரும்
மலிநீ ரகல்வயல் யாண ரூர
போதார் கூந்தல் நீவெய் யோளொடு
தாதார் காஞ்சித் தண்பொழி லகல்யாறு
ஆடினை யென்ப நெருநை அலரே
காய்சின மொய்ம்பிற் பெரும்பெயர்க் கரிகால்
ஆர்கலி நறவின் வெண்ணி வாயிற்
சீர்கெழு மன்னர் மறலிய ஞாட்பின்
இமிழிசை முரசம் பொருகளத் தொழியப்
பதினொரு வேளிரொடு வேந்தர் சாய
மொய்வலி யறுத்த ஞான்றைத்
தொய்யா அழுந்தூ ரார்ப்பினும் பெரிதே.

தோழி தலைமகற்கு வாயில் மறுத்தது.

(கு-பு) பிணர்:சுரசுரப்பு; மோடு:முகடு,வயிறு; நந்து:சங்கு; பேழ் வாய்:பிளந்த வாய்; ஏறு:ஆணைக்குறிக்கும் வாய்பாடு; ஆரல்: மீன்வகை; கரி:சாட்சி; நெடுநீர்:ஆழ்ந்த நீர். துணை : பெண் சங்கு; யாணர்:புதுவருவாய்; போது:பூக்கள்; நீவெய்யோள்: நின்னால் விரும்பப்பட்டாளாய பரத்தை; தாது : பூந்துகள்; நெருநை:நேற்று; காய்சினமொய்ம்பு:மிகுந்த சினத்தையுடைய வலிமை; பெயர்:புகழ்; கலி:ஆரவாரம்; நறவு:கள்; மறலிய: மாறுபட்ட; ஞாட்பு:போர்; சாய:நிலைகெட்டு ஓட; தொய்யா: குறையாத.

## 23. அகநானூறு - 258. குறிஞ்சி

நன்னன் உதியன் அருங்கடிப் பாழித்
தொன்முதிர் வேளி ரோம்பினர் வைத்த
பொன்னினும் அருமைநற் கறிந்தும் அன்னோள்
துன்னல மாதோ வெனினுமஃ தொல்லாய்

1. கள்வனுக

தண்மழை தவழுந் தாழ்நீர் நனந்தலைக்
கடுங்காற் றெடுக்கும் நெடும்பெருங் குன்றத்து
மாய இருளளை மாய்கற் போல
மாய்கதில் வாழிய நெஞ்சே நாளும்
மெல்லியற் குறுமகள் நல்லகம் நசைஇ
அரவிரை தேரும் அஞ்சுவரு சிறுநெறி
இரவி னெய்தியும் பெறுஅய் அருள்வரப்
புல்லென் கண்ணை புலம்புகொண் டுலகத்து
உள்ளோர்க் கெல்லாம் பெருநகை யாகக்
காமங் கைம்மிக வுறுதர
ஆனா அரும்படர் தலைத்தந் தோயே.

அல்லகுறிப்பட்டுப் பதிப்பெயர்ந்த தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

(கு-பு) கடி:காவல்; பாழி:ஒருமலை. ஓம்பினர்வைத்த; பாது காத்து வைத்த; முற்றெச்சம். பொன்னினும் அருமை: பொன்னைவிடப் பெருதற்கு அருமை; நற்கு: நன்றாக; அன்னோள்: அத்தகையளை; துன்னலம்: நெருங்கமாட்டோம்; நல்லாய்: பொருந்தாய்; மழை : மேகம்; தாழ்நீர்: தாழ்ந்து வீழும் அருவி நீர்; நனந்தலை : அகன்ற இடம்; எடுக்கும்: சுழன்றுவீசும்; மாய இருள்:மயக்கத்தைத்தரும் இருள்; அளை: குகை அளைமாய் கல்:குகையிற் புதைந்து கிடக்கும் மணிகள். மாய்க:ஒளியிழந்து போவாயாக. தில்:விழைவின் கண்ணது. குறுமகள் : தலைவி. அகம்:: மனை; அருள்வர : கண்டாரிடத்து அருள் பிறக்கும் வகையில்; அஃதாவது பரிதாபமான நிலையில். புலம்பு:தனிமை; ஆனா:அமையாத; படர்:துன்பம்; தலைத்தந் தொய்:எய்துவித்தாய்.

## 24. அகநானூறு - 262. குறிஞ்சி

முதைபடு பசுங்காட் டரிற்பவர் மயக்கிப்
பகடுபல பூண்ட உழவுறு செஞ்செய்
இடுமுறை நிரம்பி ஆகுவினைக்[1] கலித்துப்
பாசிலை யமன்ற பயிரு[2] புக்கென

1. வரகுவினை
2. பயிருழ்

வாய்மொழித் தந்தையைக் கண்களைந் தருளாது
ஊர்முது கோசர் நவைத்த சிறுமையிற்
கலத்தும் உண்ணுள் வாலிதும் உடாஅள்
சினத்திற் கொண்ட படிவ மாருள்
மறங்கெழு தானைக் கொற்றக் குறும்பியன்
செருவியல் நன்மான் திதியற் குரைத்தவர்
இன்னுயிர் செகுப்பக் கண்டுசின மாறிய
அன்னி மிஞிலி போல மெய்ம்மலிந்து
ஆனு வுவகையே மாயினெம் பூமலிந்து
அருவி யார்க்கும் அயந்திகழ் சிலம்பின்
நுண்பகல் துவலை புதல்மிசை நனைக்கும்
வண்டுபடு நறவின் வண்மகிழ்ப் பேகன்
கொண்டல் மாமலை நாறி
அந்தீங் கிளவி வந்த மாறே

இரவுக்குறிக்கண் தலைமகளைப் புணர்ந்து நீங்குந் தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

(கு-பு) முதை:பழமை; அரில்பவர்:பின்னிக்கிடக்கும் கொடிகள்; மயக்கி:உழக்கி. இடுமுறை:இடப்படும் நேர்மை அல்லது முறைமை; ஆகுவினைக்கலித்து:பொருந்திய வினை செய்தலால் தழைத்து; அமன்ற:நிறைந்த; தழைத்து விளைந்த பயற்றில் பசுப்புகுந்தவாறு என்க; ஊர்முது கோசர் : மூதூர்க்கோசர் என்று மாறுக. கோசர்க்கேயாண்டும் 'வாய்மொழி' என்னும் அடை உரித்தாயிருக்க, அன்னி மிஞிலியின் தந்தைக்கு அவ்வடையை ஏற்றிய நயம் காண்க. நவைத்த: துன்புறுத்திய, சிறுமை : கொடுமை; வாலிது : வெளியது. நல்மான் : நல்ல குதிரைப்படை; அயம்:சுனைகள்; துவலை: துளிகள். சிலம்பில் பூக்கள் மலிந்து அருவி ஆர்த்து அயம் திகழும் என்க; மிசை: மீது; அம்மலைமீது; வண்மகிழ்ப்பேகன்:வண்மையால் மகிழ்ச்சி யெய்தும் பேகன். கொண்டல்:மேகம்; வந்தமாறு: வந்தமையால். அந்தீங்கிளவி: ஆகுபெயரால் தலைவியைக் குறித்தது.

## 25. அகநானூறு - 266. மருதம்

கோடுற நிவந்த நீடிரும் பரப்பின்
அந்திப் பராஅய புதுப்புனல் நெருநை
மைந்துமலி களிற்றிற் றலைப்புணை தழீஇ

நரந்தம் நாறுங் குவையிருங் கூந்தல்
இளந்துணை மகளிரொடு ஈரணிக் கலைஇ
நீர்பெயர்ந் தாடிய ஏந்தெழின் மழைக்கண்
நோக்குதொறும் நோக்குதொறுந் தவிர்விலை
யாகிக்
காமங் கைம்மிகச் சிறத்தலின் நாணிழந்து
ஆடினை யென்ப மகிழ்ந அதுவே
யாழிசை மறுகின் நீடூர் கிழவோன்
வாய்வா ளெவ்வி யேவல் மேவார்
நெடுமிடல் சாய்த்த பசும்பூட் பொருந்தலர்
அரிமண வாயி லுறத்தூ ராங்கண்
கள்ளுடைப் பெருஞ்சோற் றெல்லிமி ழன்ன
கவ்வை யாகின்றாற் பெரிதே யினியஃது
அவல மன்றுமன் எமக்கே யயல
கழனி யுழவர் கலிசிறந் தெடுத்த
கறங்கிசை வெரீஇப் பறந்த தோகை
அணங்குடை வரைப்பகம் பொலியவந்
திறுக்குந்
திருமணி விளக்கின் அலைவாய்ச்
செருமிகு சேஎயொ டுற்ற சூளே.

பரத்தையிற் பிரிந்துவந்து கூடிய தலைமகற்குத் தலைமகள் சொல்லியது.

(கு-பு) மகிழ்ந: தலைவ! கோடு: கரை; நிவந்த: உயர்ந்த; பாயம்:விருப்பம்; நெருநை:நேற்று; தலைப்புணை தழீஇ: புணையின் தலைப்பகுதியைத் தழுவிக்கொண்டு; நரந்தம்:புல்வகை; துணைமகளிர்: தலைவற்குத்துணையாய பரத்தையர். கலைஇ: அணிந்துகொண்டு; மழைக்கண்: மேகம்போன்ற கண்கள்; கருமையாலும் நீர் உகுத்தலாலும் மேகம்போன்ற என்க. நோக்குதொறும்: பரத்தையர் தலைவனைப்பார்க்குந்தோறும், என்றேனும் தலைவன் அவர்களைப் பார்க்குந்தோறும் என்றேனும் கொள்க. தவிர்விலை:தவிராய். ஆடினை:நீர் விளையாட்டு ஆடினை. யாழ் இசைமறுகு:யாழ்இசை ஒலிக்கும் தெருக்கள். ஏவல் மேவார்:ஏவுதலை ஏற்றுக்கொள்ளாராய்; பொருந்தலர்: பகைவர். மிடல்:வலிமை; சாய்த்த:அழித்த; அரிமணல் வாயில் உறத்தூர் என்பது ஓரூரின் பெயர். எல்:பகற்பொழுது; இமிழ்: ஆரவாரம், கவ்வை:அலர். அவலம்:துன்பம்தருவது; அயல:பக்

கத்தில் உள்ள; வெரீஇ : அஞ்சி; தோகை:மயில்; அணங்கு: தெய்வம்; இறுக்கும்:தங்கும்; திருமணிவிளக்கு:அழகிய மணி விளக்கு; அலைவாய்:திருச்செந்தூர்; செருமிகுசேய் : போர்த் திறம் மிக்க முருகன்; தேவர்களின் படைத்தலைவனுதலின் 'செருமிகு சேய்' என்க; சூள்:சூளுறவு.

## 26. அகநானூறு - 276. மருதம்

நீளிரும் பொய்கை யிரைவேட் டெழுந்த
வாளை வெண்போத் துணீஇய நாரைதன்
அடியறி வுறுத லஞ்சிப் பைப்பயக்
கடியிலம் புகூஉங் கள்வன் போலச்
சாஅ யொதுங்குந் துறைகே ழூரனொடு
ஆவ தாக இனிநா னுண்டோ
வருகதில் அம்மவெஞ் சேரி சேர
அரிவே யுண்கணவன் பெண்டிர் காணத்
தாருந் தானையும் பற்றி ஆரியர்
பிடிபயின்று தரூஉம் பெருங்களிறு போலத்
தோள்கந் தாகக் கூந்தலிற் பிணித்தவன்
மார்புகடி கொள்ளே னாயின் ஆர்வுற்று
இரந்தோர்க் கீயா தீட்டியோன் பொருள்போற்
பரந்து வெளிப்படா தாகி
வருந்துக தில்லயா யோம்பிய நலனே

தலைமகட்குப் பாங்காயினர் கேட்பப் பரத்தை சொல்லியது.

(கு-பு) வேட்டு:விரும்பி; வாளைப்போத்து:ஆண்வாளை; உணீஇய:உண்ணும் பொருட்டு; தன் அடிவுறுதல் அஞ்சி:தன்அடி எழுப்பும் ஒலியை மீன் கேட்டலை அஞ்சி; பைப்பய:மெல்ல மெல்ல; கடிஇலம்;காவல் உள்ள வீட்டினுள்; சாய்;தளர்ந்து; கேழ்:பொருந்திய; ஊரன்:ஈண்டுத்தலைவன்; தாரும் தானையும்: மாலையும் ஆடையும்; தோள் கந்தாக : தோளே கட்டுத்தறியாக; யாய்:என் தாய். நலன்:அழகு; வருந்துக:வருந்திக்கெடுக என்றவாறு.

இதனைக் 'காமக்கிழத்தி சேரிப்பரத்தையைப் புலந்து கூறிய'தாக நச்சினார்க்கினியர் கூறுவர்.

## 27. அகநானூறு - 322 குறிஞ்சி

வயங்குவெயில் ஞெமியப் பாஅய் மின்னுவசிபு
மயங்குதுளி பொழிந்த பானாட் கங்குல்
ஆராக் காமம் அடூஉநின் றலைப்ப
இறுவரை வீழ்நரின் நடுங்கித் தெறுவரப்
பாம்பெறி கோலிற் றமியை வைகித்
தேம்புதி கொல்லோ நெஞ்சே யுருமிசைக்
களிறுகண் கூடிய வாள்மயங்கு ஞாட்பின்
ஒளிறுவேற் றானைக் கடுந்தேர்த் திதியன்
வருபுன லிழிதரு மரம்பயி லிறும்பிற்
பிறையுறழ் மருப்பிற் கடுங்கட் பன்றிக்
குறையார் கொடுவரி குழுமுஞ் சாரல்
அறையுறு தீந்தேன் குறவ ரறுப்ப
முயலுநர் முற்றா ஏற்றரு நெடுஞ்சிமைப்
புகலரும் பொதியில் போலப்
பெறலருங் குரையளெம் அணங்கி யோளே.

அல்ல குறிப்பட்டுப் போகின்ற தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

(கு-பு) 6. நெஞ்சே!
வயங்கு:விளங்கும்; ஞெமிய:மறைய; பாய்:பரந்து; மின்னு: மின்னல்; வசிபு:பிளக்க; துளி:மழைத்துளி; பானாள்கங்குல்: நடுஇரவு; பகுக்கப்பட்ட நாள் பானாள்; அடூஉ:வருத்தி; இறு வரை:மலையின் ஓரம்; வீழ்நர்:மலையுச்சியினின்றும் வீழ்ந்திறப் பார்; தெறுவர:அச்சம் உண்டாகும் படி; பாம்பு எறி கோலில்: கோல் எறி பாம்பின்; தேம்புதி:வாடுவாய். 'களிறு கண் கூடிய' என்புழி கண்-அசை. இறும்பு:காடு; உறழ்:உவம உருபு; குறை: இறைச்சி; கொடுவரி:புலி; அறை:பாறையின் உச்சி; முயலுநர் குறவர் : முயல்வோராகிய குறவர்; ஏற்று அரு : ஏறதற்கு அருமையான; முற்றா:நெருங்கியறியாத. குறவரும் நெருங்கி யறியாத.

## 28. அகநானூறு - 326 மருதம்

ஊர லவ்வா யுருத்த தித்திப்
பேரமர் மழைக்கட் பெருந்தோட் சிறுநுதல்



நல்லள் அம்ம குறுமகள் செல்வர்
கடுந்தேர் குழித்த ஞெள்ள லாங்கண்
நெடுங்கொடி நுடங்கு மட்ட வாயில்
இருங்கதிர்க் கழனிப் பெருங்கவி னன்ன
நலம்பா ராட்டி நடையெழிற் பொலிந்து
விழவிற் செலீஇயர் வேண்டும் வென்வேல்
இழையணி யானைச் சோழர் மறவன்
கழையளந் தறியாக் காவிரிப் படப்பைப்
புனல்மலி புதவிற் போஒர் கிழவோன்
பழையன் ஒக்கிய வேல்போற்
பிழையல கண் அவள் நோக்கியோர் திறத்தே.

தோழி தலைமகனை வாயில் மறுத்தது

(கு-பு) ஊரல் : தேமல்; உருத்த : உருவினைப்பெற்ற; தித்தி: தேமல்; நல்லள்:அழகிற் சிறந்தவள்; ஞெள்ளல் : தெருக்கள் நுடங்கும் : அசையும்; கவின் : அழகு; விழவு:புனல் விழா; சோழன்மறவன்:சோழனது படைத்தலைவன்; கழை:மூங்கில், ஈண்டு ஓடக்கோல்; படப்பை:தோட்டம்; புதவு:மதகு; போர் கிழவோன் : போர் என்னும் ஊருக்குத் தலைவன். ஒக்கிய: செலுத்திய; கண்பிழையல:கண்டார் மேல் அவள் கண்கள் தைத்தல் தப்ப மாட்டா.

## 29. அகநானூறு - 356. மருதம்

மேற்றுறைக் கொளீஇய கழாலிற் கீழ்த்துறை
உகுவா ரருந்தப் பகுவாய் யாமை
கம்புள் இயவ னாக விசிபிணித்
தெண்கட் கிணையிற் பிறழு மூரன்
இடைநெடுந் தெருவிற் கதுமெனக் கண்டென்
பொற்றொடி முன்கை பற்றின னாக
அன்னா வென்றனென் அவன்கைவிட் டனனே
தொன்னசை சாலாமை[1] நன்னன் பறம்பிற்
சிறுகா ரோடன் பயினொடு சேர்த்திய
கற்போல் நாவினே னாகி மற்றது

1. காவாமை

செப்பலன் மன்னல் யாய்க்கே நற்றேர்க்
கடும்பகட்டு யானைச் சோழர் மருகன்
நெடுங்கதிர் நெல்லின் வல்லங் கிழவோன்
நல்லடி யுள்ளா னாகவும் ஒல்லார்
கதவ முயறலு முயல்ப அதாஅன்று
ஒலிபல் கூந்தல் நம்வயி னருளாது
கொன்றன னாயினுங் கொலைபழு தன்றே
அருவி யாம்பல் கலித்த முன்றுறை
நன்ன னாஅய்ப்பிரம் பன்ன
மின்னீ ரோதி யென்னைநின் குறிப்பே.

பின்னின்ற தலைமகற்குக் குறைநேர்ந்த தோழி தலைமகளைக் குறை நயப்பக் கூறியது

(கு-பு) மேல்துறை: ஆற்றின் மேல்பால் அமைந்த துறை கொளீஇய:கொள்ளப்பட்டவை; ஈண்டு, கள் முகக்கும் கலங் கள்; கழாலின்: கழுவுதலின்; உகுவார்: சிந்துதலால் நீர் செல்லும் ஒழுக்கு; பகுவாய்:பிளந்தவாய்; யாமை: ஆமை; கம்புள்:சம்பங்கோழி; இயவன்:வாத்தியம் வாசிப்பவன்; விசி: இறுக; பிணி:பிணிக்கப்பட்ட; கண்கிணை:கண்ணினையுடைய கிணை என்னும் பறை; பிறழும்: மின்னிவிளங்கும்; இடை நெடுந்தெருவில்: நெடுந்தெருவில் இடையே; கதுமென: விரைந்து; தொல்நசை: பண்டையவிருப்பம்; காவாமை: நீக்காமலே; நன்னன்பறம்பு: நன்னற்கு உரியதும் ஒருபறம்பு மலை என்க. காரோடன்:அரக்கில் வைரம் முதலிய கற்களைப் பிணையச் சேர்க்கும் தட்டான்; இவனைச் 'சாணை பிடிப்போன்' என்று கூறுதல் பொருந்துவதாகக் காணவில்லை. 'சிறு காரோடன் பயினொடு சேர்த்திய கற்போல்' எனினும் தொடர் அகம் முதற்செய்யுளில் மாமூலனாரால் எடுத்தாளப் பட்டுள்ளமை காண்க. சங்ககாலத்திலும் உவமைகளும் அவற்றிற்கான வாசகங்களும் ஒரே மாதிரியாக அமைந் திருந்தமை காணத்தக்கது. அரக்கொடு சேர்த்திய கல் இறுகப் பிணித்துக் கொண்டு நீங்காதது போல, ஊரன் செய லால் தலைவியின் நா அண்ணத்தை விட்டு நீங்காததாயிற்று. யாய்:என் ஆய்; (தாய்:தன் ஆய்; ஞாய்:நின்ஆய்; யாய்:என் ஆய் என்பனவே மரபு வழக்கென்க). சோழர் மருகன்:சோழர் குடியல் வந்தவன். வல்லம்:ஒரூர். கிழவோன்:தலைவன்; உரிய வன். நல்லடி:ஒரு சோழனது பெயர். இவனை கோச்செங்கட்

சோழனின் மகன் என்ப. இச்சொல்லை நல்+அடி என்று பிரித்து 'நன்மை, அது பிறருக்குத் தீங்கு இயற்றாமை' என்று பொருள் காண்டல் பொருந்துவதின்று. நல் : தழைத்த; ஆய்பறம்பு: அழகிய பறம்பு

## 30. அகநானூறு - 367. பாலை

இலங்குசுடர் மண்டிலம் புலந்தலைப் பெயர்ந்து
பல்கதிர் மழுகிய கல்சே ரமையத்து
அலந்தலை மூதே ழுண்குரல் விளிப்ப
மனைவளர் நொச்சி மாசேர்பு வதிய
முனையுழை யிருந்த அங்குடிச் சீறூர்க்
கருங்கால் வேங்கைச் செஞ்சுவல் வரகின்
மிகுபதம் நிறைந்த தொகுகூட் டொருசிறைக்
குவியடி வெருகின் பைங்க ணேற்றை
ஊணசைப் பிணவின் உயங்குபசி களைஇயர்
தளிர்புரை கொடிற்றிற் செறிமயி ரெருத்திற்
கதிர்த்த சென்னிக் கவிர்ப்பூ வன்ன
நெற்றிச் சேவல் அற்றம் பார்க்கும்
புல்லென் மாலையும் இனிதுமன் றம்ம
நல்லக வனமுலை யடையப் புல்லுதொறு
உயிர்குழைப் பன்ன சாயற்
செயிர்தீ ரின்றுணைப் புணர்ந்திசி னோர்க்கே.

பிரிவிடை வேறுபட்ட தலைமகள் வற்புறுக்குந் தோழிக்குச் சொல்லியது.

(கு-பு) சுடர் : ஞாயிறு; புலம்: (தான்வதிதரும்) இடம்; அதாவது ஆகாயம்; தலைபெயர்தல்:விட்டு நீங்குதல்; மழுகிய: வெம்மை குன்றிய; கல்:மேற்குமலை ('அஸ்தமனகிரி' என்பர்) அலந்தலை:கலக்கமுற்ற. ஆண்குரல் விளிப்ப : ஆண்குரலால் அழைப்ப; நொச்சி:நொச்சி மரத்தடியில்; மாசேர்பு:விலங்குகள் குழுமி; முனை:காட்டுஅரண். வேங்கை:மரம்; சுவல் : மேட்டு நிலம்; சிறை:ஒருபுறம்; வெருகின் எற்றை:ஆண் காட்டுப்பூனை; பிணவு : அப்பூனையின் பெண்பால்; களைஇயர் : களையும் பொருட்டு ; கொடிறு: கன்னம்; எருத்து:கழுத்து; கதிர்த்த: நிமிர்ந்த; கவிர்ப்பூ:முருங்கின் பூ; அற்றம்:வசதியான அமயம்; புல்என்மாலை:பொலிவற்ற மாலைப்பொழுது. மன்ற:மிகுதியும்;

புல்லுதொறும்:முயங்குந்தோறும்; சாயல்:மென்மை; செயிர் தீர் குற்றம் நீங்கிய; துணை : துணைவனான தலைவன், புணர்ந் திசினோர்:கூடியிருப்பவர்.

## 31. அகநானூறு - 372. குறிஞ்சி

அருந்தெறல் மரபிற் கடவுள் காப்பப்
பெருந்தேன் தூங்கு நாடுகாண் நனந்தலை
அணங்குடை வரைப்பிற் பாழி யாங்கண்
வேண்முது மாக்கள் வியனகர்க் கரந்த
அருங்கல வெறுக்கையின் அரியோள் பண்பு நினைந்து
வருந்தின மாதோ வெனினுமஃ தொல்லாய்
இரும்பணைத் தொடுத்த பலரா டூசல்
ஊர்ந்திழி கயிற்றிற் செலவர வருந்தி
நெடுநெறிக் குதிரைக் கூர்வே லஞ்சி
கடுமுனை யலைத்த கொடுவி லாடவர்
ஆடுகொள் பூசலிற் பாடுசிறந் தெறியும்
பெருந்துடி வள்பின் வீங்குபுநெகிழா
மேய்மணி யிழந்த பாம்பின் நீநனி
தேம்பினை வாழியெ னெஞ்சே வேந்தர்
கோண்டணி யெயிலிற் காப்புச்சிறந்து
ஈண்டருங் குரையள்நம் அணங்கி யோளே.

அல்லகுறிப்பட்டுப் போகாநின்ற தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

(கு-பு) 'தெறல்அரும்மரபு' என்று மாறுக. தேனிறால் கள வாடப்படாமல் காக்கப்படுவது கடவுளால் என்க. தூங்கும்: தொங்கும்; நனந்தலை:அகன்ற இடம். அணங்கு:அச்சம்; பாழி: ஒருமலை; வியன்:பரந்த; கரந்த : ஒளித்துவைத்த; ஒல்லாய்: பொருந்தாய்;ஒப்பாமல்; பணை : கிளை; ஊர்ந்துஇழி : ஏறி இறங்கி; இவண் செல்லும் போதும் வரும் போதும் அஞ்சு தலால் ஊசல் உவமையாயிற்று; ஆடவர்:வீரர்; பாடு:ஒலி; வள்பு:இறுகக்கட்டியவார்; மேய்மணி:பாம்புதான் இரைதேடு தற்காகத்தன்னிடம் உள்ள மணியை உமிழ்ந்து வைத்து அதன் ஒளியில் மேயும் என்பது ஒரு வழக்கு. தேம்பினை:வாடினை.

அணங்கியோள்:வருத்துபவளாகிய தலைவி; கோண்:பகைமை; எயில்:மதில்; அருங்குரையள்:அருமையையுடையவள். நாடு காண் நனந்தலை:மலையுச்சிமீது ஏறி நாட்டை முழுதும் காண லாம் என்பது கருத்து.

நெடுநெறிக்குதிரை: உயர்ந்துசெல்லும் குதிரை என்றது 'வெளிப்படை'யால் குதிரை மலையைக்குறிக்கும்.

பாம்பு மணியையுமிழ்ந்துவைத்து இரைதேடுதல் என்பது 'நாம நல்லராக் கதிர்பட உமிழ்ந்த, மேய்மணி விளக்கில்' என்று அகம். 72ல் வருவதும் காண்க.

## 32. அகநானூறு – 376. மருதம்

செல்லல் மகிழ்நநிற் செய்கட னுடையென்மன்
கல்லா யானை கடிபுனல் கற்றென
மலிபுனல் பொருத மருதோங்கு படப்பை
ஒலிகதிர்க் கழனிக் கழாஅர் முன்றுறைக்
களிகொள் சுற்றமொடு கரிகால் காணத்
தண்பதங் கொண்டு தவிர்ந்த இன்னிசை
ஒண்பொறிப் புனைகழல் சேவடிப் புரளக்
கருங்கச்சு யாத்த காண்பி னவ்வயிற்று
இரும்பொலம் பாண்டில் மணியொடு தெளிர்ப்பப்
புனல்நயந் தாடு மத்தி அணிநயந்து
காவிரி கொண்டொளித் தாங்கு மன்னோ
நும்வயிற் புலத்தல் செல்லேம் எம்வயிற்
பசந்தன்று கண்டிசின் நுதலே அசும்பின்
அந்தூம்பு வள்ளை யழற்கொடி மயக்கி
வண்தோட்டு நெல்லின் வாங்குபீள் விரியத்
துய்த்தலை முடங்கிறுத் தெறிக்கும் பொற்புடைக்
குரங்குளைப் புரவிக் குட்டுவன்
மரந்தை[1] யன்னவென் னலந்தந்து சென்மே.

காதற் பரத்தை புலந்து சொல்லியது.

---

1. மாந்தை

(கு-பு) மகிழ்ந! : தலைவ! செல்லல் : போகவேண்டா. நிற் செய்கடன் : நின்னிடத்து நான் செயற்பாலதாய கடன் உடையென் : உடையேன். மன் : மிகுதிகாட்டிற்று; அன்றி, ஒழியிசைப்பொருட்டு எனலுமாம். புனல் கற்றென்:புனலில் நீந்துதலை கற்றதாக; படப்பை : தோட்டம்; கழனி : வயல்; முன் துறை:ஆற்றில் குளிக்கும் கட்டம்; கரிகால்:ஒருசோழன்; கழல் சேவடிக்கண்புரள். கருங்கச்சு யாத்த:வலிய கச்சினைக் கட்டிய. காண்பு இன்:காண்பதற்கு இனிய; பாண்டில்:கஞ்ச தாளம். தெளிர்ப்ப : ஒலிக்க; அணி : அழகு; அசும்பு : சேறு; தூம்பு:தொலைகளையுடைய; வாங்குபீள்:வளைந்த கதிர்; துய்: மீனின் தலையில் கொண்டைபோன்றிருப்பது; முடங்கில்: வளைந்த; இரு:மீன்வகை; குரங்கு உளை:வளைந்த பிடரியினை யுடைய; மரந்தை:ஒரூர், சென்ம்:செல்க.

## 33. அகநானூறு - 386. மருதம்

பொய்கை நீர்நாய்ப் புலவுநா றிரும்போத்து
வாளை நாளிரை தேரு மூர
நாணினென் பெரும யானே பாணன்
மல்லடு மார்பின் வலியுற வருந்தி
எதிர்தலைக் கொண்ட ஆரியப் பொருநன்
நிறைத்திரள் முழவுத்தோள் கையகத் தொழிந்த
திறன்வேறு கிடக்கை நோக்கி நற்போர்க்
கணையன் நாணி யாங்கு மறையினள்
மெல்ல வந்து நல்ல கூறி
மையீ ரோதி மடவோய் யானும்நின்
சேரி யேனே அயலி லாட்டியேன்
நுங்கை யாகுவென் நினக்கெனத் தன்கைத்
தொடுமணி மெல்விரல் தண்ணெனத் தைவர
நுதலுங் கூந்தலும் நீவிப்
பகல்வந்து பெயர்ந்த வாணுதற் கண்டே,

தோழி வாயில் மறுத்தது; தலைமகள் தகுதிசொல்லியதூஉமாம்.

(கு-பு) புலவு:புலால்; நாய்ப்போத்து:நாயின் ஆண். 'பகலில் வாளை இரையை நீர்நாய்ப் போத்து தேடும்ஊரன்' என்க. மறையினள் மறைந்தவளாய்; ஓதி : கூந்தல்; இல்லாட்டி:

மனைக்குஉரியள்; நுங்கை:நின்தங்கை; வாண்நுதல் : பரத்தை பாணன்: ஒருவீரன்; உறவருந்தி : உறுதலால்வருந்தி; முழவுத் தோள்:முழவுபோன்றதோள்; திறன்வேறுகிடக்கை:உயிரற்றுக் கிடந்த கிடக்கை; பாணனுல் தோற்று இறந்துகிடந்த ஆரியப் பொருநனைக்காணக் கணையன் என்பான் நாணினுன் என்க. மணிவிரல்: மணிபதித்த மோதிரத்தை அணிந்த விரல்.

## 34. அகநானூறு - 396. மருதம்

தொடுத்தென் மகிழ்ந செல்லல் கொடித்தேர்ப்
பொலம்பூண் நன்னன் புன்னுடு கடிந்தென
யாழிசை மறுகிற் பாழி யாங்கண்
அஞ்ச லென்ற ஆஅ யெயினன்
இகலடு கற்பின் மிஞிலியொடு தாக்கித்
தன்னுயிர் கொடுத்தனன் சொல்லிய தமையாது
தெறலருங் கடவுள் முன்னர்த் தேற்றி
மெல்லிறை முன்கை பற்றிய சொல்லிறந்து
ஆர்வ நெஞ்சந் தலைத்தலை சிறப்பநின்
மார்புதரு கல்லாய் பிறனு யினையே
இனியான் விடுக்குவெ னல்லென் மந்தி
பனிவார் கண்ணள் பலபுலந் துறைய
அடுந்திற லத்தி யாடணி நசைஇ
நெடுநீர்க் காவிரி கொண்டொளித் தாங்குநின்
மனையோள் வவ்வலும் அஞ்சுவல் சினைஇ
ஆரிய ரலறத் தாக்கிப் பேரிசைத்
தொன்றுமுதிர் வடவரை வணங்குவிற் பொறித்து
வெஞ்சின வேந்தரைப் பிணித்தோன்
வஞ்சி யன்னவென் நலந்தந்து சென்மே.

காதற்பரத்தை தலைமகற்குச் சொல்லியது.

(கு-பு) மகிழ்ந : தலைவ; தொடுத்தென் : நின் நலன் அகப் படுத்திக் கொண்டேன்; செல்லல்:போகாதே; பாழி:ஓரூர்; தேற்றி : தெளிவித்து; கைப்பற்றிய சொல்: கைப்பற்றி உரைத்த சூளுரை; தருகல்லாய்:தரமுடியாதவனுய்; மந்தி: ஆதிமந்தி; வஞ்சி:சேரர் தலைநகரம். இங்ஙனம் விற்பொறித் தவன் நெடுஞ்சேரலாதன். சென்ம்:செல்வாய்

## 35. குறுந்தொகை - 19. மருதம்

எவ்வி யிழந்த வறுமையர்[1] பாணர்
பூவில் வறுந்தலை போலப் புல்லென்று
இனைமதி வாழியர் நெஞ்சே மனைமரத்து
எல்லுறு மௌவல் நாறும்
பல்லிருங் கூந்தல் யாரளோ நமக்கே.

உணர்ப்புவயின் வாரா ஊடற்கண் தலைமகன் சொல்லியது.

(கு-பு) எவ்வியிழந்த:எவ்வியையிழந்த; பூ:ஈண்டுப்பொற்பூ. இனைமதி:வருந்துவாயாக; மனைமரம்:வீட்டில் வளரும் மரம். எல்:ஒளி; மௌவல்:முல்லைப்பூ. இரு:கரிய; யாரளோ நமக்கே: இத்தலைவி நமக்கு எத்தகைய உறவினள்?

மதி : முன்னிலையசை. முல்லையை மகளிர் வளர்த்தல் அவர்தம் கற்புடைமையைக் காட்டும்; இஃதோர் மரபு என்க.

ஊடற்கண் தேராளாய தலைவியை நினைந்து 'இவள் இப்பொழுது வேறுபாடு உடையளானுள்; ஆதலின், நெஞ்சே! பாணர் தலைபோற் பொலிவிழந்து வருந்துவாயாக' என்றான் தலைவன்.

## 36. குறுந்தொகை - 24. முல்லை

கருங்கால் வேம்பின் ஒண்பூ யாணர்
என்னை யின்றியுங் கழிவது கொல்லோ
ஆற்றய லெழுந்த வெண்கோட் டதவந்து
எழுகுளிறு[2] மிதித்த வொருபழம் போலக்
குழையக் கொடியோர் நாவே
காதல ரகலக் கல்லென் றவ்வே.

பருவங்கண்டு ஆற்றுளாகிய கிழத்தி யுரைத்தது.

(கு-பு) யாணர்:புதுவருவாய்; புதிதாகத்தோன்றுதல்தன்மை. என்னை:என் தலைவன்—ஐ: தலைவன். ஆற்று அயல்: ஆற்றங்கரை

1. வறுமையாழ்ப்
2. எழுகளிறு.

யில்; கோடு:கிளை; அதவம்:அத்திமரம். குளிறு:நண்டு குழைய: வருந்த. கொடியோர்:அயலாராகிய கொடிய மகளிர்; அவர் அலர் கூறுதலால் தலைவிக்கு கொடியராயினர்.

எழுகுளிறு:ஏழு என்னும் எண் ஈண்டு 'பல' என்னும் பொருட்டு; களிறு' என்னும் பாடத்திற்கு ஏழு களிறுகள் மிதிக்குமளவிற்குப் பழம் தாங்காமை காண்க. காதலர் வாரா மையின் அயலாராகிய கொடிய மகளிரின் நா அலர் (பழி) கூறிக்கல் என்று ஒலித்தது என்க.

## 37. குறுந்தொகை - 36. குறிஞ்சி

துறுக லயலது மாணை மாக்கொடி
துஞ்சுகளி றிவருங் குன்ற நாடன்
நெஞ்சுகள னாக நீயலென் யானென
நற்றோள் மணந்த ஞான்றை மற்றவன்
தாவா வஞ்சின முறைத்தது
நோயோ தோழி நின்வயி னானே.

வரைவிடை வைத்துப் பிரிய ஆற்றாளெனக் கவன்று வேறுபட்ட தோழியைத் தலைமகள் ஆற்றுவித்தது.

(கு-பு) துறுகல்:உருண்டைக்கல்; மாணை:ஒரு வகைக்கொடி; துஞ்சுகளிறு:தூங்குகின்ற யானை; இவரும்:ஏறிப்படரும். நீய லென்;யான்பிரியேன்; தோள் மணத்தல்:புணர்தல் என்னும் பொருட்டு; தாவா : கெடாத; வஞ்சினம் : உறுதிமொழி. ஞான்றை: ஐ—சாரியை;

'வஞ்சினமுரைத்துச் சென்ற தலைவன் வாரான் என்று நானே வருந்தவில்லையாக, நீ வருந்த வேண்டுவதின்று' என்று தோழிக்குத் தலைவி கூறியது.

## 38. குறுந்தொகை - 60. குறிஞ்சி.

குறுந்தாட் கூதளி யாடிய நெடுவரைப்
பெருந்தேன் கண்ட இருக்கை முடவன்
உட்கைச் சிறுகுடை கோலிக் கீழிருந்து
சுட்டுபு நக்கி யாங்குக் காதலர்
நல்கார் நயவா ராயினும்
பல்காற் காண்டலும் உள்ளத்துக் கினிதே.

பிரிவிடை ஆற்றாமையால் தலைமகள் தோழிக்கு உரைத்தது.

(கு-பு) குறுந்தாள் கூதளி:குறியஅடியையுடைய கூதளம் என்னும் செடி; ஆடிய:அசைந்த; இருக்கை முடவன்:எழுந்து நடமாட இயலாததால் ஓரிடத்தே இருக்கும் முடவன். குடை: பாத்திரம்; உள்ளங்கையைக் குவித்துக் கொண்டமையால் அஃது ஒரு பாத்திரம் போலாயிற்று; கோலி:குழித்து;சுட்டுபு: சுட்டி; நல்கார்: நன்மை செய்யார்; நயவார்:விரும்பார்.

தலைவர் இன்பம் நல்காராயினும், அவரைக் காண்டலே நன்றாயிற்று என்றாள் தலைவி.

'முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப்பட்டாற் போல' என்பதொரு பழமொழி. உவமையின் அருமை காண்க.

## 39. குறுந்தொகை - 73. குறிஞ்சி

மகிழ்நன் மார்பே வெய்யை யால்நீ
அழியல் வாழி தோழி நன்னன்
நறுமா கொன்று நாட்டிற் போக்கிய
ஒன்றுமொழிக் கோசர் போல
வன்கட் சூழ்ச்சியும் வேண்டுமாற் சிறிதே.

பகற்குறி மறுத்து இரவுக்குறி நேர்ந்து அதுவும் மறுத்தமை படத் தலைமகட்குத் தோழி சொல்லியது.

(கு-பு) மகிழ்நன்: தலைவன்; வெய்யை:விரும்புகின்றாய். அழியல்:வருந்தாதே; நன்னன் நறுமா:நன்னனது நறியமாமரம்; நாட்டில்:நாட்டினுள்; போகிய:புகுந்த; ஒன்றுமொழிகோசர்: வஞ்சினத்தைத் தப்பாது நிறைவேற்றும் இயல்புடைய கோசர் என்னும் வீரர். சூழ்ச்சி:ஆராய்ச்சி.

கோசர்க்கு வீரத்தோடு சூழ்ச்சியும் உண்டு போலும். 'தலைவனது மார்பை விரும்பும் நினக்கு விருப்பம் தவிரச் சிறிது ஆராய்ச்சியும் வேண்டும்' என்று தோழி தலைவிக்கு அறிவுறுத்தியவாறு. இரவுக்குறி, பகற்குறி இரண்டையும் மறுத்தமையான், வரைந்து கொள்ளுதலின் இன்றியமையாமையை அறிவித்தவாறு.

## 40. குறுந்தொகை - 89. மருதம்

பாவடி யுரல பகுவாய் வள்ளை
ஏதில் மாக்கள் நுவறலும் நுவல்ப

அழிவ தெவன்கொலிப் பேதை யூர்க்கே
பெரும்பூட் பொறையன் பேஎமுதிர் கொல்லிக்
கருங்கட் டெய்வங் குடவரை யெழுதிய
நல்லியற் பாவை யன்னஇம்
மெல்லியற் குறுமகள் பாடினள் குறினே.

தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி தன்னுள்ளே சொல்லு வாளாய்ச் சொல்லியது. தலைமகற்குப் பாங்காயினார் கேட்பச் சொல்லி வாயில் மறுத்ததூஉமாம்.

(கு-பு) பாஅடி: பரந்த அடி யையுடைய); உரல: உரலின் கண்ணது. பகுவாய்:பிளந்தவாய். வள்ளை:உலக்கைப்பாட்டு; உரலில் நெல் முதலானவற்றையிட்டு உலக்கை கொண்டு இடிக்கும் போது மகளிர் பாடும் பாட்டு. ஏதில் மாக்கள்: யாதொன்றும் தொடர்பில்லாத ஊரார். அவர் அறியாமை யால் நுவல்வராதலின் 'மாக்கள்' எனப்பட்டனர். நுவலுதல்: குறை கூறுதல். அழிவது எவன்: வருந்துதல் எக்காரணத்தால். பொறையன்:சேரன். பேய்முதிர்கொல்லி:அச்சந்தருதலைமிகுதி யாகவுடைய கொல்லிமலை. குடவரை:மேற்கு மலை; எழுதிய பாவை:தெய்வத்தின் உருவத்தை ஓவியமாகத் தீட்டிய உரு. குறுமகள் பாடினள் குறினே:வள்ளைப்பாட்டுப் பாடும் குறு மகள் பாடிக் கொண்டே உரலை இடிப்பாளாயின். கொல்லிப் பாவை பெண் உருவில் வந்து நகைத்து வருத்திக் கொல்லும் என்ப. அம்மலைக்குப் பெயரும் இக்காரணப் பொருட்டுப் போலும்.

இப்பாடல் வாயில் மறுத்த துறையாயின், தலைவி பரத்தையரை உட்கொண்டு உரலிற்குற்றினாளாக, அது கேட்டதோழி 'இவள் இங்ஙனம் குற்றுவளாயின் பரத்தையர் ஏன் குறை கூறுகின்றனர்?' என்றனள் என்று பொருள் கொள்க.

## 41. குறுந்தொகை - 120 குறிஞ்சி

இல்லோன் இன்பங் காமுற் றாஅங்கு
அரிதுவேட் டனையால் நெஞ்சே காதலி
நல்ல ளாகுத லறிந் தாங்கு
அரிய ளாகுதல் அறியா தோயே.

அல்லகுறிப்பட்டு மீளுந் தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது. இயற்கைப்புணர்ச்சி புணர்ந்த தலைமகன் பிரிந்தவழிக் கலங்கியதூஉமாம்.

(கு-பு) இல்லோன்: வறிஞன்; அரிது: பெறற்கரியது; வேட்டனை: விரும்பினை; நல்லள்: நன்மை செய்பவள். அரியள்: பெறற்கு அரியள்.

இல்லோன்: பொருளில்லாத வறிஞன் என்று பிறர் உரைத்தனர்; ஆயினும் இதற்கு 'ஆண்மையில்லாதான் மகளிர் இன்பத்தை விரும்பியாங்கு' என்று உரைத்தல் சிறக்கும். 'முலையிரண்டுமில்லாதாள் பெண்காமுற்றற்று' என்றதும் காண்க.

## 42. குறுந்தொகை - 128. நெய்தல்

குணகடற் றிரையது பறைதபு நாரை
திண்டேர்ப் பொறையன் தொண்டி முன்றுறை
அயிரை யாரிரைக் கணவந் தாஅங்குச்
சேயன் அரியோட் படர்தி
நோயை நெஞ்சே நோய்ப்பா லோயே.

அல்லகுறிப்பட்டு மீளுந் தலைமகன் தன் நெஞ்சினை நெருங்கிச் சொல்லியது. உணர்ப்புவயின் வாரா வூடற்கண், தலைமகன் கூறியதூஉமாம்.

(கு-பு) குணகடல்:கீழ்கடல்; குணக்கு:கிழக்கு. திரை:அலை; திரையது:அலைக்கு அருகில் உள்ளது. பறை: சிறகு; பறத்தற்குக்காரணமாவது. தபு:நீங்கிய; பறை தபு நாரை:முதுமையால் சிறகுகள் வீழ்ந்து போன கிழநாரை என்றவாறு. பொறையன்:சேரன். தொண்டி: மேல்கடற்கரையிலமைந்த தொண்டி என்னும் துறைமுகப்பட்டினம். அயிரை: மீன்வகை; அரு இரை: பெறுதற்கரிய உணவு. அணவந்தாங்கு: மேலே எழுப்பியது போல, அதாவது தலையைத் தூக்கியது போல. சேயன்:தொலைவில் இருப்பவன். அரியோள்:பெறற்கு அரியள்; ஈண்டுத்தலைவி. படர்தி: அடைய விரும்புகின்றாய். நோய்: வருத்தம்; நோயை:வருத்தத்தை உடையாய். பால்:ஊழ் நோய்க்குக்காரணமாகிய விதியையுடையை.

தலைவன் தன்விதியை நொந்து கொண்டவாறு.

## 43. குறுந்தொகை – 165. குறிஞ்சி

மகிழ்ந்ததன் றலையும் நறவுண் டாங்கு
விழைந்ததன் றலையும் நீவெய் துற்றனை
இருங்கரை[1] நின்ற உப்பொய் சகடம்
பெரும்பெயல் தலைய வீஇந் தாங்கிவள்
இரும்பல் கூந்த லியலணி கண்டே.

பின்னின்ற தலைமகன் மறுக்கப்பட்டுப் பெயர்த்துங் கூடலுறும் நெஞ்சிற்குச் சொல்லியது.

(கு-பு) மகிழ்ந்ததன் தலையும் : கள்ளுண்டு மகிழ்ந்ததற்கு மேலும். நறவு:கள். 'கள் உண்டு ஒரு முறை மயக்கம் கண்ட பிறகும், இன்னொரு கால் அதனை விரும்பியவாறு, தலைவியை ஒரு முறை விழைந்ததன் மேலும் அவளை விரும்புகின்றாய்' என்று தன் நெஞ்சிற்குத் தலைவன் கூறியது. இதற்கு "களித்தொறுங்கள்ளுண்டல் வேட்டற்றாற் காமம் வெளிப்படுந்தோறு மினிது" என்னும் குறளையும் காண்க. அருகரை: ஏறுதற்கு அரிய கரை. உப்பு ஒய்:உப்பைச் செலுத்துகின்ற. சகடம்:வண்டி, பெயல்:மழை. தலைய:பொழிந்ததனால்; வினையெச்சம் காரணப் பொருட்டு. வீதல்:அழிதல்.

## 44. குறுந்தொகை - 199. குறிஞ்சி

பெறுவ தியையா தாயினும் உறுவதொன்று
உண்டுமன் வாழிய நெஞ்சே திண்டேர்க்
கைவள் ளோரி கானந் தீண்டி
எறிவளி கமழும் நெறிபடு கூந்தல்
மையீ ரோதி மாஅ யோள்வயின்
இன்றை யன்ன நட்பின் இந்நோய்
இறுமுறை யெனவொன் றின்றி
மறுமை யுலகத்து மன்னுதல் பெறினே.

தோழி செறிப்பறிவுறுப்ப நெஞ்சிற்குக் கிழவன் உரைத்தது.

(கு-பு) பெறுவது : தலைவியைப் பெறுவது; இயையாது: பொருந்தாது. உறுவது:மறுமைக்கண் அடையற்பாலது. ஓரி:

1. அருங்கரை.

ஒரு வள்ளல். எறிவளி: வீசும்காற்று ஓதி:மயிர். மாயோள்: மாமை நிறத்தை உடையள். நோய்:காம நோய். இறுமுறை: அழியும் வகை. மன்னுதல் : நிலைபெறுதல். மன், வாழிய: அசைநிலைகள்

இம்மைக்கண் தோன்றிய இக்காதல் மறுமைக் கண்ணும் தொடரும் என்றான்.

## 45. குறுந்தொகை - 258. மருதம்

வாரலெஞ் சேரி தாரல்நின் தாரே
அலரா கின்றாற் பெரும காவிரிப்
பலராடு பெருந்துறை மருதொடு பிணித்த
ஏந்துகோட்டு யானைச் சேந்தன் தந்தை
அரியலம் புகவி னங்கோட்டு வேட்டை
நிரைய வொள்வா ளிளையர் பெருமகன்
அழிசி யார்க்கா டன்னவிவள்
பழிதீர் மாணலந் தொலைவன[1] கண்டே.

தோழி தலைமகற்கு வாயில் மறுத்தது; வாயில் நேர்ந்ததூஉமாம்.

(கு.பு) வாரல்:வாராதொழிக; சேரி:ஊரின் பகுதி; பலமனைகள் சேர்ந்தது 'சேரி'. தாரல்:தரவேண்டா; தார் : மாலை. அலர்:பரத்தையர் கூறும் பழிமொழி;அஃதாவது, தலைமகனைத் தன்னிடத்தே தலைவி நிறுத்திக்கொண்டாள் என்னும் கூற்று. மருது:மருதமரம். அரியல் அம் புகவு:கள்ளாகிய உணவு. அம் தோடு வேட்டை: அழகிய விலங்குத் தொகுதிகளை ஆடும் வேட்டை. நிரையம்:நரகம்; இளையர்:வீரர். அழிசி ஆர்க்காடு: அழிசி என்பானது நகரமான ஆர்க்காடு.

'இவள் (தலைவி) நலம் தொலைதலால், நீ வாரற்க; தார் தாரற்க' என்றாள் தோழி; இது வாயின் மறுத்தலில் ஒரு வாய்பாடு.

259

## 46. குறுந்தொகை - 529. குறிஞ்சி

மழைசேர்ந் தெழுதரு மாரிக் குன்றத்
தருவி யார்ந்த தண்ணறுங் காந்தள்

1. தொலைதல்

முகையவிழ்ந் தாஞு நாறு நறுநுதற்
பல்லிதழ் மழைக்கண் மாஅ யோயே
ஒல்வை யாயினுங் கொல்வை யாயினும்
நீயளந் தறிவைநின் புரைமை வாய்போற்
பொய்ம்மொழி கூறலஃ தேவனோ
நெஞ்ச நன்றே நின்வயினனே.

காப்பு மிகுதிக்கண் ஆற்ருளாய தோழி, அறத்தொடு நின்று, அவனே பரிகரிப்பானென்று கருதியதனைத் தலைமகளும் நயப்பளாகக் கூறியது.

(கு-பு) எழு தரும் : எழும்; முகை : அரும்பு; மாயோயே: மாமை நிறம் பொருந்தியவளே;ஒல்வையாயினும்: என் பிழையைப் பொறுப்பாயாயினும்; புரைமை:உயர்வு; வாய்போல்: மெய்போல; கூறல்:கூறுதல் என்னும்தொழில்; எவன்:என்ன பயனுடைத்து? வயின்:இடம்; நெஞ்சம்;தலைவனின் எண்ணம். நன்று:நலமுடையது. ஏகாரம் தேற்றம். இப்பாடல் 5, 6-ம் வரிகளை

''அடுநை யாயினும் விடுநை யாயினும்
நீயளந் தறிதி நின் புரைமை''

என்னும் புறம். 36ம் பாடற் பகுதியோடு ஒப்பிடுக.

## 47. குறுந்தொகை - 292.குறிஞ்சி

மண்ணிய சென்ற ஒண்ணுத லரிவை
புனல்தரு பசுங்காய் தின்றதன் தப்பற்கு
ஒன்பதிற் றொன்பது களிற்றோ டவள்நிறை
பொன்செய் பாவை கொடுப்பவுங் கொள்ளான்
பெண்கொலை புரிந்த நன்னன் போல
வரையா நிரையத்துச் செலீஇயரோ அன்னை
ஒருநாள், நகைமுக விருந்தினன் வந்தெனப்
பகைமுக வூரிற் றுஞ்சலோ விலளே.

தோழி இரவுக் குறிக்கண் சிறைப்புறமாகக் காப்புமிகுதி சொல்லியது

(கு-பு) மண்ணிய:நீராட; அரிவை : பெண்; புனல்: ஒடை; ஒன்பதிற்றொன்பது;எண்பத்தொன்று. அவள் நிறை பொன் செய் பாவை:அவள் எடைக்கு நிகரான எடையுள்ள ஒரு பொற்பாவை.வரையா:நீக்குதல் இல்லா; நிரையம்:நரகம். செலீஇயர்:சென்றுதுன்புறுவீர். விருந்தினன்:ஈண்டுத்தலைவன். 'தலைவன் வந்தனன் என்று துயிலாதிருந்த தாயர் நரகத்திற்குச் செல்க' என்றவாறு; அன்னையின் காப்பு மிகுதி கூறியவாறு.

## 48. குறுந்தொகை - 298. குறிஞ்சி.

சேரி சேர மெல்ல வந்துவந்து
அரிது வாய்விட் டினிய கூறி
வைகல் தோறும் நிறம்பெயர்ந்[1] துறையுமவன்
பைதல் நோக்கம் நினையாய் தோழி
இன்கடுங் கள்ளின் அகுதை தந்த
வெண்கடைச் சிறுகோல் அகவல் மகளிர்
மடப்பிடிப் பரிசில் மானப்
பிறிதொன்று குறித்ததவன் நெடும்புற நிலையே.

கிழத்திக்குத் தோழி குறைமருமற் கூறியது.

(கு-பு) சேரி சேர: நமது சேரிக்கண் வந்தடைய. வைகல்: நாள். நிறம்பெயர்ந்து:ஒளிமாறி. பைதல்:வருந்துதல். அகுதை: ஒரு வள்ளல். அகவன் மகளிர் கையில்ஒருசிறுகோல்வைத்திருப்பர்; 'நுண்கோல் அகவுநர்' என்றமை காண்க. மான:போல பிறிது ஒன்று: (கூறுவதொன்று, கருதுவது வேறு ஒன்று,) தலைவன் மடலேற நினைந்தான் என்னும் குறிப்பினைத் தோழி புலப்படுத்தியவாறு.

## 49. குறுந்தொகை - 328. நெய்தல்

சிறுவீ ஞாழல் வேரளைப் பள்ளி
அலவன் சிறுமனை சிதையப் புணரி
குணில்வாய் முரசின் இரங்குந் துறைவன்
நல்கிய நாள்தவச் சிலவே அலரே

---

1. நிலம் பெயர்ந்து

வில்கெழுதானை விச்சியர் பெருமகன்
வேந்தரொடு பொருத ஞான்றைப் பாணர்
புலிநோக் குறழ்நிலை கண்ட
கலிகெழு குறும்பூ ரார்ப்பினும் பெரிதே.

வரைவிடை வேறுபடுங் கிழத்தியை அவர் வரையும் நாள் அணித்து எனவும் அலரஞ்சல் எனவும் கூறியது.

(கு-பு) ஞாழல்:புலிநகக் கொன்றை. வேர் அளைப்பள்ளி: வேரின்கண் அமைந்த வளையிடத்தில். அலவன்:நண்டு. புணரி : அலைகள்; குணில் : குறுந்தடி. இரங்கும் : முழங்கும், ஒலிக்கும்; துறைவன்:கடல் துறைத்தலைவன்; நல்கிய: தண்ணணிசெய்த; தவ:மிகவும். அலர்:பழிமொழி, கலி: ஆரவாரம். ஆர்ப்பு:முழக்கம்.

புலிநோக்கு:இருசார்படைஞர்க்கும் இடையே நின்று இப்பாணர் பார்க்கின்றமையின் இவர் தம் நோக்குப் புலி நோக்காயிற்று. இதனைச் சிங்க நோக்கு எனவும் கூறுவர்.

ஊரார் கூறும் பழிமொழியைக் கேட்டு அஞ்சிய தலைவியை 'இப்பழிமொழி கண்டு அஞ்சற்க; இஃது இறுதியில் நன்றியே பயக்கும்' என்று கூறித் தோழி தேற்றியவாறு

## 50. குறுந்தொகை – 393. மருதம்

மயங்குமலர்க் கோதை குழைய மகிழ்நன்
முயங்கிய நாள்தவச் சிலவே அலரே
கூகைக் கோழி வாகைப் பறந்தலைப்
பசும்பூட் பாண்டியன் வினைவ லதிகன்
களிறொடு பட்ட ஞான்றை
ஒளிறுவாட் கொங்க ரார்ப்பினும் பெரிதே.

தலைமகள் சிறைப்புறமாகத் தோழி அலர் மலிவுரைத்து வரைவு கடாயது.

(கு-பு) மயங்கு மலர்க் கோதை : பலவகைப் பூக்களையும் விராவித்தொடுத்தமாலை. முயங்கிய:கூடிய; தவ:மிக; அலர்: பழிமொழி. கூகைக்கோழி:கோட்டானாகிய கோழி. "கூகைக் கோழியானாத் தாழிய பெருங்காடு" என்றார் புறத்தினும். வாகை : ஓரூர். பறந்தலை : போர்க்களம். வினைவல் அதிகன்:

ஏவல்புரிதலில் வல்லவனுன (அதாவது தானைத் தலைவனுன) அதிகன். படுதல்:இறத்தல். களிறெருடு படுதல் 'களிற்றுடனிலை' என்னும் துறை. கொங்கர்:சிலவீரர். ஆர்ப்பு:ஆரவாரம்.

தலைவன் தலைவியை அணைந்த நாட்கள் சிலவேயாயினும், அலரின் ஆர்ப்பரிப்பு மிகப் பெரிதாம் என்றவாறு.

## 51. குறுந்தொகை - 399. மருதம்

ஊருண் கேணி யுண்டுறைத் தொக்க
பாசி யற்றே பசலை காதலர்
தொடுவுழித் தொடுவுழி நீங்கி
விடுவுழி விடுவுழிப் பரத்த லானே.

வரைவு நீட்டித்தவிடத்துத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

(கு-பு) ஊருண் கேணி: ஊராரால் பருகப் பெறும் நீரினை யுடைய கேணி என்று விரிக்க. உண்துறை: உண்ணுதற்கு வசதியாக அமைந்த துறை. பசலை:தலைவன் பிரிவால் தலைவி பாற் காணப்பெறும் மேனியின் நிற வேறுபாடு. தலைவன் கூடுதலால் பசலை நீங்குவதும், அவன் பிரிவின் கண் பசலை மறுபடியும் வந்து நேர்வதும் கூறப்பட்டன.

''விடுவழி விடுவழிச் சென்றாங்கவர்,
தொடுவழித் தொடுவழி நீங்கின்றாற் பசப்பே''

என்றார் கலியுள்ளும்.

தலைவி தலைவன் பிரிவால், அதாவது அவன் வரைவு நீட்டித்தலால், தனக்கு நேர்வதைத் தோழிக்குக் கூறியது.

## 52. நற்றிணை - 6. குறிஞ்சி

நீர்வள ராம்பற் றூம்புடைத் திரள்கால்
நாருரித் தன்ன மதனில் மாமைக்
குவளை யன்ன ஏந்தெழில் மழைக்கண்
திதலை யல்குற் பெருந்தோட் குறுமகட்கு
எய்தச் சென்று செப்புநர்ப் பெறினே
இவர்யா ரென்குவ ளல்லள் முனாஅது[1]
அத்தக் குமிழின் கொடுமூக்கு விளைகனி

---

1. முனாஅது.

எறிமட மாற்கு வல்சி யாகும்
வல்வில் லோரி கானம் நாறி
இரும்பல் லொலிவருங் கூந்தல்
பெறும்பே துறுவள்யாம் வந்தன மெனவே.

இரவுக்குறிப்பாற்பட்டு ஆற்ருஞய தலைவன் தோழிகேட்பத் தன் நெஞ்சிற்குச் சொல்லியது,

(கு-பு) நீர்வளர்:நீரில் வளர்; தூம்பு:உள்ளீடில்லாத, தொளை யையுடைய (புழை); மதன்:அழகு; செப்புநர்ப்பெறின்:எமது வருகையை முன்பே கூறுவரையுடையராயின். அத்தம்: பாலைநிலம். கொடு: வளைந்த; எறிமடமான் : குதித்து விளை யாடும் மடப்பத்தையுடைய மான். முனது:வெறுப்பின்றி 'கூந்தல்' தலைவிக்காயிற்று. பேது:மயக்கம். 'முனது' என்னும் பாடத்திற்கு 'முன்னதாக' என்று கொள்க.

## 53. நற்றிணை - 100. மருதம்

உள்ளுதொறும் நகுவேன் தோழி வள்ளுகிர்
மாரிக் கொக்கின் கூரல கன்ன
குண்டுநீ ராம்பற் றண்டுறை யூரன்
தேங்கம ழைம்பால் பற்றி யென்வயின்
வான்கோ லெல்வளை வெளவிய பூசல்
சினவிய முகத்துச் சினவாது சென்றுநின்
மனையோட் குரைப்ப லென்றலின் முனையூர்ப்
பல்லா நெடுநிரை வில்லி னொய்யுந்
தேர்வண் மலையன் முந்தைப் பேரிசைப்
புலம்பரி வயிரியர் நலம்புரி முழவின்
மண்ணார் கண்ணின் அதிரும்
நன்ன ராளன் நடுங்கஞர் நிலையே.

பரத்தை தலைவிக்குப் பாங்காயினர்கேட்ப விறலிக்கு உடம்படச் சொல்லியது

(கு-பு) உள்ளுதொறும்:நினைக்கும் பொழுதெல்லாம் வள்உகிர்:பெரிய அல்லது நீண்ட நகம்; மாரிக்கொக்கு:கார் காலத்தே உலவும் கொக்கு; அலகு:மூக்கு; குண்டு நீர்: ஆழமான நீர்நிலை; ஐம்பால்:ஐந்து வகையாக முடியப்பெறும்

கூந்தல்; வான்:வெண்மையான; எல்வளை:ஒளியுடைய கைவளை. எல்வளை வெளவிய:வளை கையினின்றும் கழறுமாறு செய்த; 'சினவியமுகத்து'த் தலைவனிடம் கூறல், 'சினவாது சென்று மனையோட்கு உரைப்பல்' என்று தனித்தனி கொள்க; முனையூர்:ஊர்முனை என்று மாறுக; ஒய்யும்: செலுத்தும்; புலம்பரி வயிரியர்:வேற்று நாட்டிலிருந்து வந்த கூத்தர்; மண் ஆர் கண்:(மத்தளத்தின்) மார்ச்சனை வைத்த பக்கம்; நன்னர் ஆளன்:நன்மையை நாடுபவன், தலைவன்; அஞர்:துன்பம். 'நன்னராளன் நடுங்கஞர் நிலையைக் கண்டு உள்ளுதொறும் நகுவேன்' என்று கூட்டுக.

## 54. நற்றிணை - 201. குறிஞ்சி

மலையுறை குறவன் காதல் மடமகள்
பெறலருங் குரையள் அருங்கடிக் காப்பினள்
சொல்லெதிர் கொள்ளாள் இளைய ளனையோள்
உள்ளல் கூடா தென்றோய் மற்றுஞ்
செவ்வேர்ப் பலவின் பயங்கெழு கொல்லித்
தெய்வங் காக்குந் தீதுதீர் நெடுங்கோட்டு
அவ்வெள் ளருவிக் குடவரை யகத்துக்
கால்பொரு திடிப்பினுங் கதழுறை கடுகினும்
உருமுடன் றெறியினும் ஊறுபல தோன்றினும்
பெருநிலங் கிளரினுந் திருநல வுருவின்
மாயா வியற்கைப் பாவையிற்
போத லொல்லாளென் னெஞ்சத் தானே.

கழறிய பாங்கற்குத் தலைமகன் சொல்லியது.

(கு-பு) காப்பினள்:காப்பினையுடையள்; பெறல் அருங்குரையள் : பெறற்கு அரியள்; இனையள் : இத்தன்மையள்; அனையோள்:அவளை; என்றோய்:என்று கூறிய நண்ப!; குடவரை: மேற்குமலை; ஈண்டுக் கொல்லிமலை; கால்:காற்று; உறை:மழை; உரும்:இடி; எறியினும்:மோதினாலும்; நிலம் கிளரினும்:நில நடுக்கம் (பூகம்பம்) ஏற்படினும், திரு:அழகிய; நெஞ்சத்தான்: நெஞ்சினின்றும்; உருபு மயக்கம். ஒல்லாள்:செய்யமாட்டாத வள். குரை:அசைநிலையிடைச்சொல்.

## 55. நற்றிணை - 247. குறிஞ்சி

தொன்றுபடு துப்பொடு முரண்மிகச் சினைஇக்
கொன்ற யானைச் செங்கோடு கழாஅ
அழிதுளி பொழிந்த இன்குர லெழிலி
எஃகுறு பஞ்சிற் றாகி வைகறைக்
கோடுயர் நெடுவரை யாடும் நாடநீ
நல்கா யாயினும் நயனில செய்யினும்
நின்வழிப் படூஉமென் தோழி நன்னுதல்
இருந்திறை கூடிய பசலைக்கு
மருந்துபிறி தின்மைநற் கறிந்தனை சென்மே.

நீட்டியாமை வரையெனத் தோழி சொல்லியது.

(கு-பு)துப்பு:வலிமை; சினைஇ:சினந்து; செங்கோடு : சிவந்த கொம்பு; புலியைக் கொன்று அதன் ரத்தத்தில் தோய்ந்தமையால் சிவந்த என்க. கழாஅ:கழுவுமாறு: வழிதுளி:வீழ்கின்ற மழை. இன் குரல் எழிலி : மேகத்தின் பயன் கருதி 'இனிமை' கூறினார். எஃகு:பஞ்சு ஆயும் வில்; நல்குதல்:அன்பு செய்தல்; தோழி நன்னுதல்:தோழியின் நல்ல நெற்றியில்; இறைகூடிய பசலை:நிற்றல் (என்றும் இருத்தல்) மிகுந்த பசலை நோய். பிறிது இன்மை : (பசலை நோய்க்குத் தலைவனாகிய நின்னையன்றிப்) பிறிது ஒன்று இல்லாமை. அறிந்தனை செல்: அறிந்து செல்க; அறிவாயாயின் செல்க.

'இன்குரல் எழிலி கோடுயர் நெடுவரைக் கண் ஆகும் நாட' என்று இயைக்க.

## 56. நற்றிணை – 260. மருதம்

கழுநீர் மேய்ந்த கருந்தா ளெருமை
பழனத் தாமரைப் பனிமலர் முனைஇத்
தண்டுசேர் மள்ளரின் இயலி யயலது
குன்றுசேர் வெண்மணற் றுஞ்சு மூர
வெய்யை போல முயங்குதி முனையெழத்
தெவ்வர்த் தேய்த்த செவ்வேழ் வயவன்
மலிபுனல் வாயி லிருப்பை யன்னவென்

ஒலிபல் கூந்தல் நலம்பெறப் புனைந்த
முகையவிழ் கோதை வாட்டிய
பகைவன் மன்யான் மறந்தமை கலனே.

ஊடல் மறுத்த தலைமகள் சொல்லியது.

(கு-பு) கழுநீர்:செங்கழுநீர் மலர்; முணைஇ:வெறுத்து; தண்டு: கைத்தடி; மள்ளர்:வீரர்; இயலி:இயங்கி, நடந்து; வெய்யை: விருப்பமுடையாய்; முயங்குதி:என்னைத் தழுவுகின்றாய்; முனை:பகை; தெவ்வர்:பகைவர்; தேய்த்த:அழித்த; வயவன்: வீரன்;இருப்பை:ஊர்ப்பெயர்; ஒலி:தழைத்த; பல்கூந்தல்: ஐம்பாலாகப்பல்கிய கூந்தல்; கோதை: மாலை; மறந்து அமை கலன்:மறந்திரேன். பகைவன்மன்:பகைவனல்லையோ?

'வெய்யை போல்' என்றமையான் 'உண்மையில் அன்பிலை' என்று கூறினாள்.

## 57. நற்றிணை – 265. குறிஞ்சி

இறுகுபுன[1] மேய்ந்த அறுகோட்டு முற்றல்
அள்ள லாடிய புள்ளி வரிக்கலை
வீளை யம்பின் வில்லோர் பெருமகன்
பூந்தோள் யாப்பின் மிஞிலி காக்கும்
பாரத் தன்ன வார மார்பிற்
சிறுகோற் சென்னி ஆரேற்று அன்ன[2]
மாரி வண்மகி ழோரி கொல்லிக்
கலிமயிற் கலாவத் தன்னவிவள்
ஒலிமென் கூந்தல் நம்வயி னனே

பின்னின்ற தலைமகன் நெஞ்சிற்குரைத்தது.

(கு-பு) இறுகு : காய்ந்த; அறுகோடு : உதிர்ந்த கொம்பு. முற்றல் அள்ளல்:முதிர்ச்சியையுடைய சேறு; புள்ளிவரிக்கலை: புள்ளியையும் வரியையுமுடைய கலைமான்; வீளை : இதழ் குவித்து எழுப்பப்பெறும் ஒலி; பூந்தோள் யாப்பு : அழகிய தோளில் கவசம் பொருத்தப் பெற்ற;

1. இறுகு புல்
2. யர் சேற றன்ன

பாரம் : ஊர்ப்பெயர்; ஆரம் : ஆத்திமாலை. சிறுகோல் சென்னி : சிலவாகிய ஊர்களை ஆளும் செங்கோலையுடைய சோழன்; கலிமயில்:தருக்கிச் செருக்கும் மயில்; வயினள்:நம் வயத்தவள்; ஆரேறு:ஊர்ப்பெயர்.

## 58. நற்றிணை - 270. நெய்தல்

தடந்தாட் டாழைக் குடம்பை நோனுத்
தண்டலை கமழும் வண்டுபடு நாற்றத்து
இருள்புரை கூந்தற் பொங்குதுக ளாடி
உருள்பொறி போல எம்முனை வருந்தல்
அணித்தகை யல்லது பிணித்தல் தேற்ருப்
பெருந்தோட் செல்வத் திவளினும் எல்லா
எற்பெரி தளித்தனை நீயே பொற்புடை
விரியுளைப் பொலிந்த பரியுடை நன்மான்
வேந்த ரோட்டிய ஏந்துவேல் நன்னன்
கூந்தல் முரற்சியிற் கொடிதே
மறப்பல் மாதோநின் விறற்றகை மையே.

தோழி வாயினேர்கின்ருள் தலைமகனை நெருங்கிச் சொல்லி வாயிலெதிர் கொண்டது, உடனிலைக் கிளவி வகையால்.

(கு-பு) எல்லா:ஆண்பால் விளி; 'ஏடா' என்பது பொருள். தாழைக்குடம்பை : தாழைப்புதலினலே வேயப் பெற்ற (கூரையையுடைய) சிறு வீடு; நோனு:பொறுக்க முடியாத; தண்தலை:குளிர்ந்த இடமாகிய சோலை; 'வண்டு படு கூந்தல்; நாற்றத்துக் கூந்தல்; இருள் புரை கூந்தல்' என்று தனித்தனி கூட்டுக. புரை:உவம உருபு. துகள்:தூசி, புழுதி; ஆடி : விளையாடி; உருளுதல்:புரளுதல்; அணித்தகை:அழகில்லாத நிலை. செல்வத்து இவள்;செல்வமகளாகிய இத்தலைவி. என்:என்னை; பெரிது: மிகவும்; அளித்தனை : அருள் செய்தனை ; பொற்பு: அழகு; உளை : குதிரையின் பிடரிமயிர் ; பரி:வேகம்; மான்: விலங்கு என்ற அளவில் நின்ற இச்சொல் குதிரையைக் குறிக்கும். ஏந்துவேல் நன்னன் : உயர்த்திய வேலையுடைய நன்னன் என்றேனும் வேல் ஏந்து நன்னன் என்றேனும் கொள்க கூந்தல் முரற்சி : கூந்தலைத்திரித்துக் கயிருக்கிய செயல்; விறல்தகைமை:வலிய தகுதி; மறப்பல்:மறந்து விடுகின்றேன். மாது, ஓ:அசை. பிணித்தல் தேற்ருப்பெருந்தோள்;

கணவனைத் தன் வயப்படுத்தத் தெரியாத தலைவி. எம் முன் ஐ: 'ஐ' சாரியை.

இச்செய்யுள் 3-5 வரிகளில்

''பொங்குதுகள் ஆடி
உருள்பொறி போல எம்முனைவருதல்
அணித்தகையல்லது பிணித்தல் தேற்று''

என்னும் பிறபாடமும் உண்டு. ஈண்டு 'வருதல்' என்னும் பாடம் ஓரளவு சிறக்கும்.

உருள்பொறி:சுற்றுகின்ற இயந்திரம்

## 59. நற்றிணை - 280. மருதம்

கொக்கினுக் கொழிந்த தீம்பழங் கொக்கின்
கூம்புநிலை யன்ன முகைய ஆம்பற்
றூங்குநீர்க் குட்டத்து துடுமென வீழுந்
தண்டுறை யூரன் தண்டாப் பரத்தமை
புலவா யென்றி தோழி புலவேன்
பழன யாமைப் பாசறைப் புறத்துக்
கழனி காவலர் சுரிநந்[1] துடைக்குந்
தொன்றுமுதிர் வேளிர் குன்றூ ரன்னவென்
நன்மனை நனிவிருந் தயருங்
கைதூ வின்மையின் எய்தா மாறே.

வாயில் வேண்டிச் சென்ற தோழிக்குத் தலைமகள் மறுத்து மொழிந்தது; தலைமகனை ஏற்றுக்கொண்டு வழிப்பட்டாளைப் புகழ்ந்து புக்க தோழிக்குத் தலைமகள் சொல்லியதூஉமாம்.

(கு-பு) கொக்கினுக்கு:கொக்கு அசைதல் காரணமாக; ஒழிந்த:கீழே வீழ்ந்த; முகைய:அரும்புகளையுடைய; ஆம்பல் தூங்குநீர்:ஆம்பல் அசைகின்ற (தொங்குகின்ற) நீர் நிலை. குட்டம்:ஆழமான நீர் நிலை. தண்டா:அமையாத; புலவாய்: கோபியாதே; நனிவிருந்து:பலராகிய விருந்தினரை; அயர்தல்; உபசரித்தல்; கைதூவு இன்மை:கையொழியாமை; துடுமெனல்:ஒலிக்குறிப்பு.

பரத்தமை:தன்னின்வேறும் தன்மை.

---

1. சுடுநந்

மேற்செய்யுளில் முதல் துறைக்கு:விருந்தினர் இருத்தலின், அவனைக்காண நேரமின்மையின் தலைவனைத் திரும்பவும் சேரிக்கே செல்லவிடுக என்றாள் என்க;

இரண்டாவது துறைக்கு;நாம் தலைவனோடு புலவாமைக்குக் காரணம் விருந்தினர் இருத்தலால் தலைவனோடு புலத்தற்கு ஒழிவில்லை என்றனள் என்க.

கழனி காவலர் சுடுகின்ற நந்தின் ஊனையாமை ஓட்டில் உடைத்துத் தின்பர் என்றது, அவ்வூனுக்குச் சமமான பரத்தையைத் தேடிச் செல்வன் இத்தலைவன் என்று கூறற் பொருட்டு.

## 60. நற்றிணை - 300. மருதம்

சுடர்த்தொடிக் கோமகள் சினந்தென
அதனெதிர்
மடத்தகை யாயங் கைதொழு தாஅங்கு
உறுகா லொற்ற வொல்கி யாம்பல்
தாமரைக் கிறைஞ்சுந் தண்டுறை யூரன்
சிறுவளை விலையெனப் பெருந்தேர் பண்ணியெம்
முன்கடை நிறீஇச் சென்றிசி னோனே
நீயும், தேரொடு வந்து பேர்தல்[1] செல்லாது
நெய்வார்ந் தன்ன துய்யடங்கு நரம்பின்
இரும்பா ணொக்கற் றலைவன் பெரும்புண்
ஏஎர் தழும்ப னூணூ ராங்கண்
பிச்சைசூழ் பெருங்களிறு போலவெம்
அட்டி லோலை தொட்டனை நின்மே.

வாயில் மறுத்தது. வரைவுகடாயதூஉமாம் : மாற்றோர் நொதுமலாளர் வரைவின் மேலிட்டு.

(கு-பு) கோமகள் : அரசன் மகள்; சினந்தென:சினந்தவுடன்; அதன் எதிர்:அவ்விடத்தில்; ஆயம்:தோழியர் கூட்டம்; உறு கால்:மிகுந்த காற்று; ஒல்கி:குவிந்து இறைஞ்சும்: வணங்கும்; சிறுவளை:சிறியவளையையுடைய இவள்; பண்ணி: அலங்கரித்து; முன்கடை:கடை முன் என்று மாறி, வாயில் முன் என்று

1. போதல்

கொள்க. சென்றிசினேன்:சென்றேன். நின்ம்:நின்றனை. இரும் பாண் ஒக்கல் தலைவன்:பெரிய பாண் குழாத்திற்குத் தலைவன். 'பிச்சை சூழ் பெருங்களிறு' என்ற உவமை நயம் காண்க.

## 61. நற்றிணை - 310. மருதம்

விளக்கி னன்ன சுடர்விடு தாமரைக்
களிற்றுச்செவி யன்ன பாசடை தயங்க
உண்டுறை மகளி ரிரியக் குண்டுநீர்
வாளை பிறழு மூரற்கு நாளை
மகட்கொடை யெதிர்ந்த மடங்கெழு[1] பெண்டே
தொலைந்த நாவின் உலைந்த குறுமொழி
உடன்பட் டோராத் தாயரொ டொழிபுடன்
சொல்லலை கொல்லோ நீயே வல்லைக்
களிறுபெறு வல்சிப் பாணன் கையதை
வள்ளுயிர்த் தண்ணுமை போல
உள்யாது மில்லதோர் பொய்படு[2] சொல்லே.

வாயிலாகப்புக்க விறலியைத் தோழி சொல்லியது. விறலியை எதிர்ப்பட்ட பரத்தை சொல்லியதூஉமாம்.

(கு-பு) விளக்கைப்போல் ஒளிவிடுகின்ற தாமரை என்க; அத்தாமரையின் இலை களிற்றுச்செவி அன்னது. தயங்க: அலைய; இரிய:அஞ்சி ஓட; குண்டு:ஆழமான; வாளை:மீன்வகை. மகட்கொடை: ஒருபரத்தையைத் தேடிக்கொணர்ந்துதருதல்: நேர்ந்த:உடன்பட்ட; பெண்டு:ஈண்டு விறலி; தொலைந்த நா: உண்மை பேசியறியாத நா, உலைந்த : நிலைகுலைந்த; ஒழிபு: சென்று; வல்லை:விரைவாக; கன்றுபெறு வல்சி : கன்றினைத் தின்னும் உணவையுடைய; ஈண்டுக் 'களிறுபெறு வல்சிப் பாணன்' என்று கொண்டு அதுவே சிறந்த பாடம் என் பாருமுளர். ஆயினும் அப்பாடத்தில் 'வல்சி' என்னும் சொல் வேண்டா என்க. தண்ணுமை:ஒருவகை வாச்சியம்; உள்யாதும் இல்லது:உள்ளீடு இல்லாத; போர்வைச்சொல் ; மேற்பூச்சை யுடைய சொல். சொல்லலை : நீ சொல்லவில்லை. இப்பாடல் விறலியின் இழிதகைமை கூறிற்று.

---

1. மறங்கெழு
2. போர்வையஞ்

## 62. நற்றிணை - 350. மருதம்

வெண்ணெல் அரிநர் தண்ணுமை வெரீஇப்
பழனப் பல்புள் இரியக் கழனி
வாங்குசினை மருதத் தூங்குதுண ருதிருந்
தேர்வண் விராஅ னிருப்பை யன்னவென்
தோள்கவின்[1] தொலையினுந் தொலைக சார
விடேஎன் விடுக்குவெ னுயிற் கடைஅக்
கவவுக்கை தாங்கு மதுகையங் குவவுமுலை
சாடிய சாந்தினை வாடிய கோதையை
ஆசில் கலந்தழீஇ யற்று
வாரல் வாழிய கவைஇநின் றோளே.

தலைமகள் ஊடல் மறுத்தாள் சொல்லியது

(கு-பு) அரிநர்:அறுக்கும் மள்ளர்; வெரீஇ:அஞ்சி; இரிய:ஓட; வாங்குசினை:வளைந்தகொம்பு; துணர்:பூங்கொத்து; இருப்பை: ஊர்ப்பெயர்; சாரவிடேன்:என்னை நெருங்கவிடேன். மதுகை: வலிமை; குவவு:குவிந்த; சாந்து:சந்தனம்; சாந்தினை:சாந்தினை யுடையை; கோதையை:மாலையையுடையை. ஆகில்:இவ்வாறு யின்; கலந்தழீஇயற்று: பொருளை இழந்து நின்ற வெற்றுக் கலத்தைத் தழுவியதோடொக்கும். 'பரத்தையால் நலனெ லாம் கவரப்பெற்றபின், தலைவன் ஓர் வெற்றுக்கலம் போல வன்' என்றாள். வாரல்:ஈண்டுவாரற்க. கவைஇ:அணைத்து. நின் தோளை அப்பரத்தையே அணைத்து நுகரட்டும் என்றவாறு.

## 63. நற்றிணை - 356. குறிஞ்சி

நிலந்தாழ் மருங்கிற் றென்கடல் மேய்ந்த
விலங்குமென் தூவிச் செங்கா லன்னம்
பொன்படு நெடுங்கோட் டிமையத் துச்சி
வானர மகளிர்க்கு மேவ லாகும்
வளராப் பார்ப்பிற் கல்கிரை யொய்யும்
அசைவில் நோன்பறை போலச் செல்வர

1. தொல்கவின்

வருந்தினை வாழியென் னுள்ள மொருநாட்
காதலி யுழைய ளாகக்
குணக்குத் தோன்றுவெள்ளியின் எமக்குமார்
வருமே.

வரைவு மறுக்கப்பட்டு ஆற்றுனுகிய தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

(கு-பு) கடல் மேய்ந்த : கடலில் மேய்ந்த; விலங்கு தூவி: ஒன்றினின்றும் ஒன்று விலகி இருக்கும் சிறகுகள். பார்ப்பு: பறவைகளின் குஞ்சுகள்; ஒய்யும் : செல்லும்; பறை : சிறகு; செல்வர வருந்தினை:தலைவியால் வரைவு மறுக்கப்பட்ட தலைமகன் தன் நெஞ்சிற்குக் கூறியதாதலின், இதன் பொருள்: பலமுறை என்னிடமிருந்து தலைவியிடம் செல்லுதலும் திரும்பி வருதலுமாக வருத்தமுற்றுய் என்பது. குணக்கு : கிழக்கு. வெள்ளி : சுக்ரன்; விடியற்காலையில் தெரியும் கிரகம். உழையள்:அருகில் உள்ளவள். அருகிலுள்ளவளாதல் நமக்குக் கிடைக்குமோ என்றவாறு. ஆர்:அசை. வருமே:வருமோ.

## 64. பதிற்றுப்பத்து - ஐந்தாம் பத்து

### 41

புணர்புரி நரம்பின் தீந்தொடை பழுனிய
வணரமை நல்யாழ் இளையர் பொறுப்பப்
பண்ணமை முழவும் பதலையும் பிறவும்
கண்ணறுத் தியற்றிய தூம்பொடு சுருக்கிக்
காவிற் றகைத்த துறைகூடு கலப்பையர்
கைவ லிளையர் கடவுட் பழிச்ச
மறப்புலிக் குழூஉக்குரல் செத்து/வயக்களிறு
வரைசேர் பெழுந்த சுடர்வீ வேங்கைப்/
பூவிடைப் பெருஞ்சினை வாங்கிப் பிளந்துதன்
மாயிருஞ் சென்னி யணிபெற மிலைச்சிச்
சேஎ ருற்ற செல்படை மறவர்
தண்டுடை வலத்தர் பேரெதிர்ந் தாங்கு
வழையமல் வியன்காடு சிலம்பப் பிளிறும்
மழைபெயல் மாறிய கழைதிரங் கத்தம்

ஒன்றிரண் டலபல கழிந்து திண்டேர்
வசையில் நெடுந்தகை காண்குவந் திசினே
தாவ லுய்யுமோ மற்றே தாவாது
வஞ்சின முடித்த ஒன்றுமொழி மறவர்
முரசுடைப் பெருஞ்சமத் தரசுபடக் கடந்து
வெவ்வ ரோச்சும் பெருகத் தெவ்வர்
மிளகெறி யுலக்கையின் இருந்தலை யிடித்து
வைகார்ப் பெழுந்த மைபடு பரப்பின்
எடுத்தே றேய கடிப்புடை வியன்கண்
வலம்படு சீர்த்தி யொருங்குட னியைந்து
காலுளைக் கடும்பிசி ருடைய வாலுளைக்
கடும்பரிப் புரவி யூர்ந்தநின்
படுந்திரைப் பனிக்கட லுழந்த தாளே.

துறை - காட்சிவாழ்த்து; வண்ணம் - ஒழுகுவண்ணம் தூக்கு - செந்தூக்கு; பெயர் - சுடர்வீவேங்கை.

(கு-பு) புணர்புரி : நன்றாக முறுக்கப்பட்ட; தீந்தொடை: இனியகட்டு; பழுனிய:முதிர்ந்த, பழுத்த. வணர் அமை:வளைதல் பெற்ற; நல்யாழ் : இசையிற் சிறந்த யாழ்; இளையர் பொறுப்ப:இளைய மகளிர் கையில் தாங்க;

'வணர் கோட்டுச் சிறியாழ்' (புறம் 155:21) என்னும் ஆட்சி காண்க.

முழவு:மத்தளம்; பதலை:ஒரு கண்மாக்கிணை; இது கஞ்சிரா போன்றதொரு தாளவாத்தியம். கண் அறுத்து : மூங்கிலின் கணுக்களை வெட்டி; தூம்பு:பெருவங்கியம். தூம்பு மூங்கிலாற் செய்யப்படுவது என்பதை 'கழை வளர் தூம்பு' (மலைபடு. 533) என்னுமிடத்துக் காண்க. 'பண்ணமை' என்புழி, பண்ணுதல் அல்லது சுருதி கூட்டுதல் அமைந்த எனலும் ஒன்று. கா: காவடி; தகைத்த:கட்டிய; துறை:ஆடல் பாடல் ஆகிய துறைகள்; கலப்பை:கலம்+பை; இவற்றிற்கு வேண்டிய இசைக் கலங்களை இட்டபை; இப்பையினையுடையர் கலப்பையர். கைவல் இளையர்:செய்கை (யாழ் முதலியவற்றை வாசித்தல்) வல்ல சிறுவர்; பழிச்ச:வாழ்த்த; புலிக்குழூஉ : புலிக்கூட்டம்; செத்து:கருதி; வயக்களிறு:வன்மைமிக்க ஆண்யானை; சேர்பு பொருந்தி; சுடர்வீவேங்கை : ஒளிவிடும் பூக்களையுடைய வேங்கைமரம்; மா இரும்:கரிய பெரிய; மீமிசையுமாம்; மிலைச்சி:

வாத்தியக்காரர்களின் இசையினைக்கேட்டுப் புலி உறுமுவதாக எண்ணிய யானை மலைப்பக்கத்தே இருந்த வேங்கை மரத்தின் கொடிகளையொடித்துத்தன் மீது இட்டுக்கொண்டது என்று தற்குறிப்பேற்றினர். வேங்கை என்று அம்மரத்திற்குக் காரணப் பெயர் போலும். சேளர் உற்ற:சேர்தல் அல்லது திரட்சி.பொருந்திய; 'சேர்' என்பது ஓர் உரிச்சொல் செல் படை மறவர்: பகைவர் மீது செல்லுமாறு செலுத்தப்படும் படைக்கலங்களையுடைய போர் வீரர். தண்டு:போர்ப்படை வலத்தர் : வெற்றியையுடையவர்; வழை : சுரபுன்னை; அமல் வியன்காடு:பொருந்திய அகன்றகாடு; சிலம்ப:ஒலிப்ப; கழை திரங்கு அத்தம் : மூங்கில் வாடிப்போன அரிய காட்டுவழி. கழிந்து : கடந்து நீங்கி. வசையில் : குற்றமற்ற; நெடுந்தகை: என்று செங்குட்டுவனை விளித்தார். வந்திசின் : வந்தேன். 'ஒன்று, இரண்டு, பல' என்னுமிடத்து ஒன்றன்பால் பலவின் பால் என்னும் பால் (எண்) வேறுபாடே தமிழில் இருக்க, இங்ஙனம் கூறியது ஏகவசனம், துவசனம், பகுவசனம் என்னும் வடமொழிப் பாகுபாட்டினை உட்கொண்டு என்ப.

தாவல் : 'தா என்னும் உரிச்சொல் தொழிற்பெயர்ப் பட்டுத் தாவல் என நின்றது' (பழைய உரை); வருத்தம் என்னும். பொருட்டு. உய்யுமோ:நீங்குமோ. வெவ்வர்:வெப் பம்; ஓச்சும்:மிகுதி; தெவ்வர்:பகைவர்; மிளகு எறி உலக்கை: உலக்கை எறி மிளகு என்றும்கொள்க; வைகு ஆர்ப்பு:விடியற் காலையில் ஆரவாரம்; இடையறாத ஒலி எனலுமாம்; மை: கருமை; பரப்பு:கடல். ஏறு:எறிதல். ஏய:ஏவிய; கடிப்பு:குறுந் தடி. வியல்கண்:அகன்ற கண்ணையுடைய (முரசம்); ஒருங்கு உடன் இயைந்து:ஒன்று சேர்ந்து பொருந்தி; சீர்த்தி:பெருமை; ஓர்:உரிச்சொல். கால்:காற்று; வால்உளை:வெண்மையான தலை யாட்டம் என்னும் அணியை உடைய; பரி:வேகம்.

இச்செய்யுட்பிற்பகுதியில் செங்குட்டுவன் கடல் பிறக் கோட்டியமை கூறினர்.

இப்பாடல் 'சுடர் வீவேங்கை' என்னும் பெயர்த்து; இதற்கு 'களிறு தன் சினத்தாற் செய்த செயலுக்கெல்லாம் வேங்கை காரணமாய் நின்றமையான் 'சுடர்வீ வேங்கை' என்று பெயராயிற்று' என்று காரணம் கூறுவர் பழைய உரைகாரர்.

65. 42

இரும்பனம் புடைய லீகை வான்கழல்
மீன்தேர் கொட்பிற் பனிக்கய மூழ்கிச்
சிரல்பெயர்ந் தன்ன நெடுவெள் ளூசி
நெடுவசி பரந்த வடுவாழ் மார்பின்
அம்புசே ருடம்பினர்ச் சேர்ந்தோ ரல்லது
தும்பை சூடாது மலைந்த மாட்சி
அன்னோர் பெரும நன்னுதல் கணவ
அண்ணல் யானை யடுபோர்க் குட்டுவ
மைந்துடை நல்லமர்க் கடந்து வலந்தரீஇ
இஞ்சிவீ விராய பைந்தார் பூட்டிச்
சாந்துபுறத் தெறிந்த தசும்புதுளங் கிருக்கைத்
தீஞ்சேறு விளைந்த மணிநிற மட்டம்
ஓம்பா ஈகையின் வண்மகிழ் சுரந்து
கோடியர் பெருங்கிளை வாழ ஆடியல்
உளையவிர் கலிமாப் பொழிந்தவை யெண்ணின்
மன்பதை மருள அரசுபடக் கடந்து
முந்துவினை யெதிர்வரப் பெறுதல் காணியர்
ஒளிறுநிலை யுயர்மருப் பேந்திய களிறூர்ந்து
மான மைந்தரொடு மன்ன ரேத்தநின்
தேரொடு சுற்ற முலகுடன் மூய
மாயிருந் தெண்கடல் மலிதிரைப் பௌவத்து
வெண்டலைக் குரூஉப்பிசி ருடையத்
தண்பல வரூஉம் புணரியிற் பலவே.

துறை - செந்துறைப் பாடாண்பாட்டு: வண்ணம் - ஒழுகுவண்ணம்.
தூக்கு - செந்தூக்கு; பெயர் - தசும்புதுளங்கிருக்கை.

(கு-பு) இரும்பனம் : கரிய பனைமாலை; ஈகை: தங்கம்; வான்: சிறந்த; பனைமாலைவீரக்கழல் என்பவற்றைச் சேரன் படை வீரரோடு ஒட்டுக. கொட்பு: சுழற்சி; சிரல் : மீன்கொத்திப் பறவை. நெடுவெள் ஊசி: நீண்ட வெள்ளிய (மருத்துவ) ஊசி. நெடுவசி: ஊசித் தழும்பு; மீன் கொத்தியின் அலகு புண்ணைத் தைக்கும் ஊசிக்கு ஒப்பாயது.

பிறரோடு தும்பை சூடாமல் தம்மை ஒத்த பகைஞ ரோடே போர் புரியும் சிறப்புடைய.

நன்னுதல் கணவ:பதிற்று 14:15 வரி காண்க. ஆண்டுப் போல இங்கும், மகளிரைச் சார்த்து வகையாற்பாடுதலே மரபாதலின் இங்ஙனம் பாடினர். இதனை தொல். புறத் 26: நச். உரையிற் காண்க. இஞ்சி வீ : இஞ்சித்துண்டம்; விராய: கலந்த; இஞ்சியினையும் பூவையும் கலந்து தொடுத்த மாலை என்க. சாந்து : சந்தனம். கட்குடங்கள் மீது சந்தனம் பூசியிருந்தனர். துளங்கு:அசையும். மட்டம்:கள். ஓம்பா ஈகை: எதனாலும் எல்லையிடப்படாத ஈகை; (புறம் 8:4); கோடியர்: கூத்தர். மன்பதை:மக்கட்கூட்டம். ஒளிறு : விளங்குகின்ற. மைந்தர் : மைந்தினையுடையர்; வீரர் என்றவாறு. மூய: நெருங்க. மா:கரிய; பௌவம்:கடல்; குரு:நிறம். பிசிர்:திவலை; தண்பல:குளிர்ச்சி பொருந்திய பலவாக. புணரி:அலை 'கலிமா புணரிபற்பல' என்று கூட்டுக. தாவிச் செல்லுதலாலும் மிகுதி பற்றியும் (சில சமயங்களில் வெண்மைபற்றியும்) விரைந்து செல்லும் குதிரைகளுக்கு அலைகள் உவமையாம். 'தன் களிப்பு மிகுதியால் தன்னையுண்டார் உடல் போல அத்தசும்பு இருந்து ஆடும்படியான இருப்பு என்றமையின் இப்பாடல் தசும்பு துளங்கிருக்கை' என்னும் பெயர்த்து என்பது பழைய உரை.

66. 43

கவரி முச்சிக் கார்விரி கூந்தல்
ஊசல் மேவற் சேயிழை மகளிர்
உரல்போற் பெருங்கா லிலகுவாள் மருப்பிற்
பொருங்கை[1] மதமாப் புகுதரின் அவற்றுள்
விருந்தின் வீழ்பிடி யெண்ணுமுறை பெறாஅக்
கடவுள் நிலைய கல்லோங்கு நெடுவரை
வடதிசை யெல்லை யிமய மாகத்
தென்னங் குமரியொ டாயிடை யரசர்
முரசுடைப் பெருஞ்சமந் ததைய ஆர்ப்பெழச்
சொல்பல நாட்டைத் தொல்கவி னழித்த
போரடு தானைப் பொலந்தார்க் குட்டுவ
இரும்பணை திரங்கப் பெரும்பெய லொளிப்பக்
குன்றுவறங் கூரச் சுடர்சினந் திகழ

1. பெருங்கை.

அருவி யற்ற பெருவறற் காலையும்
அருஞ்செலற் பேராற் றிருங்கரை யுடைத்துக்
கடியேர் பூட்டுநர் கடுக்கை மலைய
வரைவி லதிர்சிலை முழங்கிப் பெயல்சிறந்து
ஆர்கலி வானந் தளிசொரிந் தாஅங்கு
உறுவ ராரஓம்பா துண்டு
நகைவ ராரநன் கலஞ் சிதறி
ஆடுசிறை யறுத்த நரம்புசே ரின்குரற்
பாடு விறலியர் பல்பிடி பெறுக
துய்வீ வாகை நுண்கொடி யுழிஞை
வென்றி மேவ லுருகெழு சிறப்பிற்
கொண்டி மள்ளர் கொல்களிறு பெறுக
மன்றம் படர்ந்து மறுகுசிறைப் புக்குக்
கண்டி நுண்கோல் கொண்டுகளம் வாழ்த்தும்
அகவலன் பெறுக மாவே யென்றும்
இகல்வினை மேவலை யாகலிற் பகைவருந்
தாங்காது புகழ்ந்த தூங்குகொளை முழவின்
தொலையாக் கற்பநின் னிலைகண் டிகுமே
நிணஞ்சுடு புகையொடு கனல்சினந் தவிராது
நிரம்பகல் பறியா ஏறு வேணி
நிறைந்து நெடிதிராத் தசும்பின் வயிரியர்
உண்டெனத் தவாஅக் கள்ளின்
வண்கை வேந்தேநின் கலிமகி ழானே.

துறை - இயன்மொழிவாழ்த்து. பெயர் - ஏறுவேணி.

(கு-பு) கவரிமுச்சி:கவரியை அணிந்த உச்சிக் கொண்டை. கார்விரி கூந்தல் : மேகத்தைப் போன்ற விரிந்த கூந்தல். ஊசல் மேவல்:ஊசலை விரும்பிய; சேயிழை : செம்மை இழை; செவ்விய அணிகள். மருப்பு:யானைக் கொம்பு; புகுதரின்:புகுந் தால்; 'உரற் கால் யானை' என்றார் குறுந்தொகையுள்ளும் (232:4):" 'விருந்தின் வீழ்படி' : எண்ணுகின்ற மகளிர் (2-வது வரி)க்கு விருந்தாகி அம்மகளிர் விரும்பிய படி" என்பது பழைய உரை. இமயமலைச் சாரலிலுள்ள பெண்கள் அங் குள்ள பெண் யானைகளை எண்ணப் புகுந்தால் அவை பல வாதலின் எண்ணில் அடங்கா என்றவாறு. கடவுள் நிலை இய கல் ஓங்கு நெடுவரை : தெய்வங்கள் நிலைத்திருக்கும்

கற்கள் உயர்ந்து இருக்கும் நீண்டமலைத் தொடர் என்று இமயத்தைக் குறித்தலால் இது பத்தினிக் கடவுளைப் பற்றிய குறிப்போ என்று ஐயுற இடனாகின்றது. சமம்:போர்; சொல் பல நாடு:பேசப்படும் பல நாடுகள். பொலம்:பொன்; பணை; மூங்கில்; பெயல்:மழை. வறம் : வற்றிப்போகும் நிலை; வறல்: பஞ்சம்; அருஞ் செலல் : நீர்ச்செலவு மிகுந்த; பேராறு:பேரி யாறு எனற்பாலது திரிந்தது; யாறு என்பதே சொல்; இரும்: பெரிய; பேராறு, வறண்ட காலத்திலும் நீர்ச்செலவு மிக் கிருக்கும் என்றது அதன் 'ஜீவ நதி'த்தன்மையைக் குறித்த வாறு. வரைவில்:எண்ணிறந்த; சிலை முழங்கி:அதிர்த்து ஒலி செய்து; தளி:மழைத்துளி; உறுவார்:தன்னை அண்டியவர்கள்; ஆர:வயிறார; ஓம்பாது:தனக்கென்று இட்டுவைத்துக் கொள் ளாமல்; நகைவர்:இன்பத்திற்குக் காரணரான பாணர் முதலி யோர். 'நகைவர் ஆர நன் கலஞ் சிதறி' என்னும் அடி பதிற்று. 37ம் பாடல் 4-ம் அடியாகவும் இருத்தல் காண்க. ஒரே கருத்தை ஒரே சொற்றொடரால் கூறும் பழக்கம் பண்டைத்தமிழ்ப் புலவரிடையே மிக்கிருந்தமை புலனாகும். நகைவர்க்கு ஆரம் சிதறி என்று உருபு விரிக்க.

ஆடுகின்ற:அசைகின்ற; சிறை:சிறகு;வெற்றிபெற்ற சிறை எனலுமாம். சிறை ஆகுபெயராகி அதனையுடைய கின்னரம் என்னும் பறவைக்கு ஆயிற்று; கின்னரம் இசைக்குப் பெயர் பெற்ற பறவை. நரம்புசேர் இன்குரல்:யாழ்நரம்பின் இசை யை ஒத்த குரலிசை என்றதால் யாழும் குரலும் இசையில் ஒக்கும் என்றவாறு. 22-ம் வரியில் ''‘பாடுவல் விறலியர்’ என்றிருப்பின் ஓசை சிறக்கும்'' என்பர் உ. வே. சாமிநாத ஐயர்; அவர் புறம். 172:3 மேற்கோளை இதற்குக் காட்டுவர். மகளிர் பிடி யூந்தலே மரபு என்பர். கொண்டி மள்ளர்:பகைப் புலத்தை கொள்ளை கொண்ட செல்வத்தையுடைய வீரர். மறுகு சிறை:ஓர் இசைத்துறை; இதனை பதிற்று:23.5ல் ‘மன்றம் போந்து மறுகுசிறை பாடும்’ என்றமையாலும் அதற்கு உ. வே. சாமிநாத ஐயர் உரைத்த உரையாலும் காணலாம். ஆண்டு அவ்வுரைகாரர் ‘மறுகுசிறை : சென்று மீளும் பக்க மாகிய இசைத்துறைகளைப் பாடும்; மறுகு சிறையென்றது ஆரோகண அவரோகணக்கிரமம் போன்ற ஓர் இசை முறை போலும்’ என்று ஐயப்பட்டுக் கூறினர். பதிற்று 29:8லும் ‘மன்றம் நண்ணி மறுகுசிறை பாடும்’ என்றமை காண்க. பாணன் கையில் நுண்கோல் இருக்கும் என்க. அகவலன் : குடும்பத்தார் யாவரையும் அழைத்துப்புகழ்தல் அவன் மரபா

தலின்பாணன் இப்பெயர் பெற்ருன் 'நுண்கோல் அகவலன்' என்னும் மதுரைக்காஞ்சியாட்சி காண்க. மா : குதிரை. மேவலே:விரும்புகின்றனே. செங்குட்டுவற்குப்போரைவிரும்பும் இயல்பு உண்டு என்பது

'வையங் காவல் பூண்டநின் னல்யாண்
டையைந் திரட்டி சென்றதற் பின்னும்
அறக்கள வேள்வி செய்யாது யாங்கணும்
மறக்கள வேள்வி செய்வோ யாயினே'

என்ற சிலப்பதிகாரத்தில் (28:129-132) காண்க. தூங்கு கொளே முழவு:மந்தமான ஓசையையுடைய மத்தளம்.

கற்ப:கல்வியையுடையோய். கண்டிகும்:கண்டோம் ஏரு ஏணி:கோக்காலி; வயிரியர்:கூத்தர். உண்டெனத்தவா:உண்ட பொழுதும் குறையாத; அதாவது அக்கட்குடங்களே மேன் மேலும் நிரைத்தலால். கலிமகிழ்:மிக்க மகிழ்ச்சி.

''கோக்காலியை ஏருஏணி என்று வெளிப்படுத்த சிறப் பான் இப்பாடற்கு இப்பெயர் ஆயிற்று'' என்ருர் பழைய உரைகாரர்.

67. 44

நிலம்புடைப் பன்ன ஆர்ப்பொடு விசும்புதுடையூ
வான்தோய் வெல்கொடி தேர்மிசை நுடங்கப்
பெரிய வாயினும் அமர்கடந்து பெற்ற
அரிய வென்னு தோம்பாது வீசிக்
கலஞ்செலச் சுரத்த லல்லது கவினுங்[1]
களேகென அறியாக் கசடில் நெஞ்சத்து
ஆடுநடை யண்ணனிற் பாடுமகள் காணியர்
காணி லியரோநிற் புகழ்ந்த யாக்கை
முழுவலி துஞ்சு நோய்தபு நோன்ருெடை
நுண்கொடி யுழிஞை செல்போ ரறுகை
சேண ஞயுனுங் கேளென மொழிந்து
புலம்பெயர்ந் தொளித்த களேயாப் பூசற்கு
அரண்கள் தாவுறீஇ யணங்குநிகழ்ந் தன்ன

1. கனவினும்

மோகூர் மன்னன் முரசங் கொண்டு
நெடுமொழி பணித்தவன் வேம்புமுதல் தடிந்து
முரசுசெய முரச்சிக் களிறுபல பூட்டி
ஒழுகை யுய்த்த கொழுவில் பைந்துணி
வைத்தலை மறந்த துய்த்தலைக் கூகை
கவலை கவற்றுங் குராலம் பறந்தலை
முரசுடைத் தாயத் தரசுபல வோட்டித்
துளங்குநீர் வியலகம் ஆண்டினிது கழிந்த
மன்னர் மறைத்த தாழி
வன்னி மன்றத்து விளங்கிய காடே.

துறை - செந்துறைப்பாடாண் பாட்டு. வண்ணமும் தூக்கும் அது.
பெயர் - நோய்தபுநோன்றொடை.

(கு-பு) நிலம்புடைப்பு:நிலம் அதிருமாறு அதனைப்புடைத்தல். துடையூ:துடைத்து; நுடங்க:அசைய; பெரிய:பெருமையுடையன; அமர்கடந்து : போரில் வென்று; அரிய என்னுது : இக் கொள்ளைப் பொருள்கள் பெறற்கரிய என்று கருதாமலும், அவற்றைத்தனக்கு இட்டுவைத்துக்கொள்ளாமலும், மற்றையோர்க்குக் கொடுத்து. ''அரிய எல்லாம் எளிதினிற் கொண்டு, உரிய எல்லாம் ஓம்பாது வீசி'' என்ற மதுரைக்காஞ்சியடிகள் (145-146) காண்க.

கலம் செலச்சுரத்தல் : தனது (அல்லது பகைவர்களிடமிருந்து தான் பெற்ற) அணிகளைப் பிறருக்கு எப்போதும் கொடுத்தல். களைகென:களைக என; என்துன்பத்தை மாற்றுக என்று. கசடுஇல் நெஞ்சம் : குற்றமற்ற உள்ளம். ஆடுநடை அண்ணல்:வெற்றியைத்தோற்றும் நடையை (ஒழுக்கத்தை) உடைய பெரியோய். காணியர்:காண்பாளாக; காணிலியர் : காணுதொழிவாளாக. நோய் : துன்பு; தபு:நீங்கிய; நோன்றொடை ; வலியகட்டு. யாக்கப்படுவது யாக்கை யென்றாற் போலப் பல உறுப்புக்களால் தொடுக்கப்படுவது தொடையாயிற்று அறுகை:குட்டுவன் பகைவன் ஒருவன்; சேணன்: தொலைவில் இருப்பவன். அரண்கள் தாஉறீஇ:கோட்டைகளை வருத்தமுறச்செய்து. அணங்கு நிகழ்ந்தன்ன : தெய்வங்கள் வருத்திஞற்போல; நெடுமொழிபணித்து : மோகூரின் மேம்பாட்டுச்சொற்களைக் குறைவித்து. வேம்பு:மோகூரின் கடிமரம். முரச்சி:முற்றுவித்து; 'முரற்சிக்களிறு' என்று பாடம் கொண்டு, முரற்சி:பகைமகளிரின் கூந்தலை அரிந்து திரித்த கயிற்றினைப்

பூட்டிய யானை எனலுமாம். இப்பாடமே சிறக்கும் என்று தோன்றுகிறது, நற்றிணையில் 'வேந்தர் ஒட்டிய வேந்து வேல் நன்னன் கூந்தல் முரற்சியிற் கொடிதே' என்றது காண்க (270: 9-10); கொழு : கொழுப்பு; பைந்துளி:பசிய இறைச்சித் துண்டங்கள். கவலை:கோட்டானது சேவல்; குரால் : அதன் பெண்பால்; பறந்தலை:இடுகாடு. தாயம் : உரிமை; மன்னர் மறைத்ததாழி:இறந்துபட்ட மன்னர்களின் உடல்களைக் கவித்த பானைகள். 'நெடுமாவளவன்......கவிக்கும் கண்ணகல்' (புறம். 228-10,12) காண்க. காடு : இடுகாடு. காடு (23) காணிலியர் (8) என்று கூட்டுக. அதாவது, 'நோன்றொடையைப்பாடுமகள் காண்க; காடு காணுதொழிக' என்றது செங்குட்டுவனை வாழ்த்தியவாறு.

யாக்கையை இவ்வழகிய சொற்றொடரால் புகழ்ந்ததால் 'நோய்தபு நோன்றொடை' இப்பாடற்குப் பெயராயிற்று என்பது பழைய உரை.

68. 45

பொலம்பூந் தும்பைப் பொறிகிளர் தூணிப்
புற்றடங் கரவின் ஒடுங்கிய அம்பின்
நொசிவுடை வில்லி னொசியா நெஞ்சிற்
களிறெறிந்து முரிந்த கதுவா யெஃகின்
விழுமியோர் துவன்றிய அகன்க ணாட்பின்
எழுமுடி மார்பி னெய்திய சேரல்
குண்டுக ணகழிய மதில்பல கடந்து
பண்டும் பண்டுந்தாம் உள்ளழித் துண்ட
நாடுகெழு தாயத்து நனந்தலை யருப்பத்துக்
கதவங் காக்குங் கணையெழு வன்ன
நிலம்பெறு திணிதோ ளுயர வோச்சிப்
பிணம்பிறங் கழுவத்துத் துணங்கை யாடிச்
சோறுவே றென்னா ஊன்றுவை யடிசில்
ஓடாப் பீட ருள்வழி யிறுத்து
முள்ளிடு பறியா ஏணித் தெவ்வர்
சிலைவிசை யடக்கிய மூரி வெண்தோல்
அனைய பண்பிற் றானை மன்னர்
இனியா ருளரோநின் முன்னு மில்லை

மழைகொளக் குறையாது புனல்புக நிறையாது
விலங்குவளி கடவுந் துளங்கிருங் கமஞ்சூல்
வயங்குமணி யிமைப்பின் வேலிடுபு
முழுங்குதிரைப் பனிக்கடல் மறுத்திசி னோரே.

இதுவுமது. பெயர் - ஊன்றுவையடிசில்.

(கு-பு) பொலம்பூ : பொன்னாலாகிய பூ; தூணி : அம்பறாத் தூணி; அம்புப்புட்டில். இதில், பொறிகிளர் : தீப்பொறி பறக்கின்ற, அன்றி, கோல வேலைப்பாடு அமைந்த. புற்று அடங்கு அரவன்:புற்றில் அடங்கிக்கிடக்கும் பாம்பைப்போல; தூணி புற்றாகவும் அம்பு பாம்பாகவும் உவமிக்கப்பட்டன. நொசிவு:வளைவு; துவளுதல். கதுவாய்எஃகு:படுகவினைப்பெற்ற வேல்; விழுமியோர்:வீரர், சான்றோர் என்புழிப் போல. நாட்பு:போர்க்களம்; எழுமுடிமார்பு:'ஏழு அரசரை வென்று அவர்கள் ஏழு முடியாலும் செய்ததோர் ஆரம்' என்றும் பழைய உரை (பதிற்று. 14:11) காண்க.

அகழிய : அகழை உடைய; தாயம்:உரிமை; நனந்தலை: அகன்ற இடம்; அருப்பம்:கோட்டை; கணையெழு:கதவைப் பிணிக்கும் கணைய மரம்; ஓச்சி:ஓங்கி; அருவம் : போர்க்கள மாகியநிலப்பரப்பு; துணங்கை:கூத்துவகை; சோறுவேறென்ற ஊன்றுவையடிசில்:மன்னருக்கு வேறு சோறு, பிறர்க்குவேறு சோறு என்ற வேறுபாடு காணாத வடிக்கப்பட்ட சோறு; ஊன்துவையடிசில்:ஊனும் துவையலும் கலந்த சோறு; பீடர்; பெருமையுடையார்; ஏணி:எல்லை; தெவ்வர்:பகைவர்; எல்லையை வேலிமுள்ளிட்டு அடைக்காத பகைவருடைய என்க. சிலைவிசையடக்கிய : வில் செலுத்தும் அம்பின் வேகத்தைத் தடுத்துநிறுத்தும்; தோல்:கேடயம்; வளி:காற்று. இடுபு:இட்டு; கடல் மறுத்திசினோர்:கடல் வாணிபத்தை நடக்கவொட்டாமல் தடுத்தோர்; கடல் பிறக்கோட்டிச் செங்குட்டுவன் இத்தகையோரையே வென்றான் என்க.

சோறு வேறென்றஅடிசில் என்று அடையிட்டுக் கூறிய சிறப்பால் 'ஊன்றுவையடிசில்' என்பதே இப்பாட்டிற்குப் பெயராயிற்று - இது பழைய உரைகாரர் கருத்து.

69. 46

இழையர் குழையர் நறுந்தண் மாலையர்
சுடர்நிமி ரவிர்தொடி செறித்த முன்கைத்

திறல்விடு திருமணி யிலங்கு மார்பின்
வண்டுபடு கூந்தல் முடிபுனை மகளிர்
தொடைபடு பேரியாழ் பாலை பண்ணிப்
பணியா மரபின் உழிஞை பாட
இனிதுபுறந் தந்தவர்க் கின்மகிழ் சுரத்தலிற்
சுரம்பல கடவுங் கரைவாய்ப் பருதி
ஊர்பாட் டெண்ணில் பைந்தலை துமியப்
பல்செருக் கடந்த கொல்களிற் றியானைக்
கோடுநரல் பௌவங் கலங்க வேலிட்டு
உடைதிரைப் பரப்பிற் படுகட லோட்டிய
வெல்புகழ்க் குட்டுவற் கண்டோர்
செல்குவ மென்னார் பாடுபு பெயர்ந்தே.

இதுவுமது. பெயர் - கரைவாய்ப்பருதி.

(கு-பு) இழையர்:ஆபரணங்களை அணிந்தவர்கள்; குழையர்: தளிர்களை அணிந்தவர்கள்; நறுந்தண் மாலையர் : நறுமணத்தையுடைய குளிர்ச்சி பொருந்திய மாலைகளை அணிந்தவர்கள்; சுடர்:ஒளி; திறல்:நீலஒளி; திரு:அழகு; பாலை பண்ணி:பாலைப் பண்ணை இயற்றி; பணியா மரபு : பகைவர்க்குப் பணியாத இயல்பு; புறந்தந்தவர்:பாது காத்தவர். கடவும்:செலுத்தப் படும்; கரைவாய்ப்பருதி : தேய்ந்த வாயையுடைய உருளை, தேர்ச்சக்கரம். பருதி என்பது வட்டம்; சக்கரம் வட்டமா யிருத்தலின் உருளைக்கு ஆகு பெயராயிற்று. ஊர்பாடு:ஊர் கின்ற போக்கில். இவ்வாட்சி யின்றும் பேச்சு மொழியிற் காணப்படும்; பைந்தலை:பசுமைதலை; பசுமை:தூய்மை; வீரத் தால் தூய்மைபெற்ற தலைகள் என்க. செரு:போர்; கோடு: சங்கு; நரல்:ஒலிக்கின்ற; பௌவம்:கடல்; அவனைப்பாடினோர் அவனை விட்டு நீங்கக் கருதார் என்றவாறு. தேர்ச்சக்கரத் திற்கு அடைமொழி கொடுத்து இத்தொடராற் சிறப்பித் தமையான் இப்பாடல் இப்பெயர் பெற்றது என்பர் பழைய உரைகாரர்.

70 47

அட்டா னானே குட்டுவன் அடுதொறும்
பெற்றா னாரே பரிசிலர் களிறே
வரைமிசை யிழிதரும் அருவியின் மாடத்து
வளிமுனை யவிர்வருங் கொடிநுடங்கு தெருவிற்

சொரிசுரை கவரும் நெய்வழி புராலிற்
பாண்டில் விளக்குப் பருஉச்சுட ரழல
நன்னுதல் விறலியர் ஆடுந்
தொன்னசர் வரைப்பினவ னுரையா றுவே.

இதுவுமது. பெயர் - நன்னுதல்விறலியர்.

(கு-பு) அட்டு ஆனுன்:பகைவரை வென்று கொன்று அஃதே போதும் என்று அமையான்; ஆனுர்:அமையார். வளிமுனை: காற்றினிடத்தே; அவிர் வரும் : விளங்கும்; சொரி சுரை: சொரியப்பட்ட நெய்யையுடைய திரிக்குழாய்; வழிபுராலின்: வழிதலால்; பாண்டில் விளக்கு:இதனைச்சால் விளக்கு என்பர். பருஉச்சுடர்:பருமையையுடைய; அழல:வீச.

விறலியர் அழகினை அவர்கள் நெற்றியை வருணித்த வாறே கூறுதலால் இப்பாடல் இப்பெயர் பெற்றது என்பது பழைய உரைகாரர் கருத்து. மகளிர்க்கு நெற்றி சிறுத்திருப் பின் அழகிற்கு அறிகுறி; அழகினை நெற்றி மீதேற்றிக் கூறினுர். 'நுதல் அடி நுசுப்பு என மூவழிச் சிறுகி' என்றுர் கலியுள்ளும் (108:3).

71. 48

பைம்பொற் ருமரை பாணர்ச் சூட்டி
ஒண்ணுதல் விறலியர்க் காரம் பூட்டிக்
கெடலரும் பல்புகழ் நிலைஇ நீர்புக்குக்
கடலொ டுழந்த பனித்துறைப் பரதவ
ஆண்டுநீர்ப் பெற்ற தாரம் ஈண்டிவர்
கொள்ளாப் பாடற் கெளிதினின் ஈயுங்
கல்லா வாய்மைய னிவனெனத் தத்தங்
கைவ லிளையர் நேர்கை நிரைப்ப
வணங்கிய சாயல் வணங்கா வாண்மை
முனைசுடு கனையெரி யெரித்தலிற் பெரிதும்
இதழ்கவி னழிந்த மாலையொடு சாந்துபுலர்
பல்பொறி மார்பநின் பெயர்வா ழியரோ
நின்மலைப் பிறந்து நின்கடல் மண்டு
மலிபுனல் நிகழ்தருந் தீ நீர் விழவிற்
பொழில்வதி வேனிற் பேரெழில் வாழ்க்கை

மேவரு சுற்றமோ டுண்டினிது நுகருந்
தீம்புன லாய மாடுங்
காஞ்சியம் பெருந்துறை மணலினும் பலவே.

துறை - இயன்மொழி வாழ்த்து. வண்ணமும் தூக்கும் அது.
பெயர் - பேரெழில் வாழ்க்கை.

(கு-பு) பாணர்க்குப் பொற்றாமரை சூட்டல் மரபு; ஆரம்: அணி; பரதவ:கடற்றுறையில் உழந்தவன்; கடல் உழல்வது போற் காண்கின்றது; குட்டுவன் உழந்தான்; அத்தொழில் ஒப்புமைபற்றிக் கூறினாராகக் கொள்க. ஆண்டு:கடலில்; நீர்ப் பெற்ற:நீரிற்பெற்ற; கொள்ளாப்பாடல் : மனங்கொள்ளாப் பாடல்; மனத்திற்குமேலும் செல்லும்பாடல்; வணங்கிய சாயல்: மகளிரிடத்து வணங்கும் மென்மை; வணங்கா ஆண்மை:பகை ஆடவரிடத்து வணங்கா ஆண்மை. கனைஎரி: மிக்க நெருப்பு; தீ நீர்:திவிய நீர், இனிய நீர். வேனிற் காலத்தில் மனையில் வசிக்காமல் பொழில்களில் வசிக்கும் பெரிய செல்வ அழகையுடைய வாழ்க்கை என்று சிறப்பாகக் கூறினமையான் இப்பாடற்குப் பேரெழில் வாழ்க்கை என்பது பெயராயிற்று. இது பழைய உரைகாரர் கருத்து.

காஞ்சி:கொங்கு நாட்டில் உள்ள ஓராறு; 'காஞ்சி வாய்ப் பேரூர்' என்பது தேவாரப்பாடல் பெற்ற தலங்களில் ஒன்று.

72 **49**

யாமுஞ் சேறுகம் நீயிரும் வம்மின்
துயலுங் கோதைத் துளங்கியல் விறலியர்
கொளைவல் வாழ்க்கைநுங் கிளையினி துணீஇயர்
களிறுபரந் தியலக் கடுமா தாங்க
ஒளிறுகொடி நுடங்கத் தேர்திரிந்து கொட்ப
எஃகுதுரந் தெழுதருங் கைகவர் கடுந்தார்
வெல்போர் வேந்தரும் வேளிரு மொன்று
மொழிந்து
மொய்வளஞ் செருக்கி மொழிந்துவரு மோகூர்
வலம்படு குழூஉநிலை யதிர மண்டி
நெய்த்தோர் தொட்ட செங்கை மறவர்
நிறம்படு குருதி நிலம்படர்ந் தோடி
மழைநாட் புனலின் அவற்பரந் தொழுகப்

படுபிணம் பிறங்கப் பாழ்பல செய்து
படுகண் முரசம் நடுவட் சிலைப்ப
வளனற நிகழ்ந்து வாழுநர் பலர்படக்
கருஞ்சினை விறல்வேம் பறுத்த
பெருஞ்சினக் குட்டுவற் கண்டனம் வரற்கே.

துறை - விறலியாற்றுப்படை. வண்ணமும் தூக்கும் அது.
பெயர் – செங்கைமறவர்.

(கு-பு) சேறுக:செல்லுவோம்; நீயிரும் என்றது விறலியரை; ஆதலால் இது விறலியாற்றுப்படை என்க. துயலும்: அசைகின்ற; கோதை:மாலை; கொளை:இசைப்பாட்டு; கொட்ப: சுழல; எஃகு:வேல்; கை:பக்கப்படை(The flanks of an army); தார்:தூசிப்படை. மொய்:வலிமை; மொய்வளத்தாற்செருக்கி; மொசிந்து:மொய்த்து; மோகூர்:அதன் மன்னனுன பழையன். நெய்த்தோர்:குருதி. படைக்களங்களால் புண்பட்ட பகைவரது உடலினின்றும் கொப்புளிக்கும் இரத்தத்தில் தமது கைகளை களைவர் (!) அம்மறவர்.

இப்பெருமையானே இப்பாடற்குச் 'செங்கை மறவர்' என்பது பெயராயிற்று என்ருர் பழைய உரைகாரர்.

அவல் : பள்ளம்; வளனற நிகழ்ந்து : கொட்டுவளயம் கெடுமாறு நிகழ; நிக்ழ்ந்து—எச்சத்திரிபு. வேம்பு பழையனது கடிமரம்

73. 50

மாமலை முழக்கின் மான்கணம் பனிப்பக்
கான்மயங்கு கதழுறை யாலியொடு சிதறிக்
கரும்பமல் கழனிய நாடுவளம் பொழிய
வளங்கெழு சிறப்பி னுலகம் புரைஇச்
செங்குணக் கொழுகுங் கலுழி மலிர்நிறைக்
காவிரி யன்றியும் பூவிரி புனலொரு
மூன்றுடன் கூடிய கூட லனையை
கொல்களிற்று, உதவுத்திரை பிறழ அவ்வில் பிசிரப்
புரைதொல் வரைப்பின் எஃகுமீ னவிர்வர

விரவுப்பணை முழங்கொலி வெரீஇய வேந்தர்க்கு
அரண மாகிய வெருவரு புனற்ருர்
கல்மிசை யவ்வுங் கடலவும் பிறவும்
அருப்ப மமைஇய அமர்கடந் துருத்த
வாள்மலி[1] மருங்கின் நாடகப் படுத்து
நல்லிசை நனந்தலை யிரிய வொன்ஞர்
உருப்பற நிரப்பினை யாதலிற் சாந்துபுலர்பு
வண்ணம் நீவி வகைவனப் புற்ற
வரிஞிமி றிமிரு மார்புபிணி மகளிர்
விரிமென் கூந்தல் மெல்லணை வதிந்து
கொல்பிணி திருகிய மார்புகவர் முயக்கத்துப்
பொழுதுகொள் மரபின் மென்பிணி யவிழ
எவன்பல கழியுமோ பெரும பன்ஞள்
பகைவெம் மையிற் பாசறை மரீஇப்
பாடரி தியைந்த சிறுதுயி லியலாது
கோடுமுழங் கிமிழிசை யெடுப்பும்
பீடுகெழு செல்வ மரீஇய கண்ணே.

துறை - வஞ்சித்துறைப் பாடாண்பாட்டு. வண்ணம் - ஒழுகு வண்ணமும் சொற்சீர் வண்ணமும். தூக்கு - செந்தூக்கு பெயர்- வெருவருபுனற்ருர்.

(கு-பு) மாமலை முழக்கு : மலைமீது இடியோசை; மான் : விலங்குகள்; பனிப்ப:நடுங்க; கால்:காற்று; உறை : மழைத் துளி; ஆலி:ஆலங்கட்டி; புரைஇ:பாதுகாத்து; செங்குணக்கு: நேர்கிழக்காகப்பாயும்; கலுழி:கலங்கியது பூவிரி புனல் ஒரு மூன்று : பூக்கள் விரிந்த நீரையுடைய மூன்று ஆறுகளும் ஒன்ருகக் கூடிய கடல். காவிரி, ஆன்பொருநை, குடவஞறு ஆகிய மூன்று ஆறுகள். இவை சேருமிடம் திருமுக்கூடல் எனப்படும். உரவுத்திரை : உலாவுகின்ற திரைகள். அவில்: அழகிய வில். பிசிர:பிசிர்போல விளங்க; எஃகுமீன்:வேலாகிய மீன். வெருவரு புனற்ருர்:பகைவர் அஞ்சத்தக்க தூசிப்படை யாகிய வெள்ளம்; புனற்ருர் என்பதைத் தார்ப்புனல் என்று மாற்றிக் கொள்க. கல்மிசையவும்:மலைகளின் மேலுள்ளனவும்; கடலவும்:கடலில் உள்ளனவும்; அருப்பம்:அரண். அமை இய: அமைத்த. ஆள்மலி மருங்கின்:வீரர்கள் மிக்கிருந்த இடங்களை

1. ஆண்மலி

யுடைய; நாடு அகப்படுத்து : நாடுகளைத்தன் வசப்படுத்திக் கொண்டு. இசை : புகழ்; பகையரசரின் புகழ் கெட்டு ஓட என்றபடி ஞிமிறு:வண்டு; கூந்தலாகிய அணையில் வதிந்து என்க. கொல்பிணி திருகிய : வருத்துகின்ற காமமாகிய பிணியைக் கொன்ற. பொழுதுகொள் மரபு : மகளிருடைய முயக்கத்தால் இராப் பொழுதைப் பயனுள்ள தாக்கிய மரபு. மென்பிணி அவிழ : சிறுதுயில் நீங்க; வென்பல கழியுமோ: நீ பாசறையில் தங்குவதால் மேற்கூறியவாறு மகளிர் முயக்கம் முதலியன நிகழ்த்தற்கு இன்னும் எத்துணை நாட் செல்லுமோ. பாடு:தூக்கம்; கோடு:கொம்பு என்னும் வாச்சியம். பீடு:பெருமை. 'மரீஇய கண்மென்பிணி யவிழ வென் பல கழியுமோ' என்று கூட்டுக.

இப்பாட்டில் பகைவர் அஞ்சவரும் படைப்பகுதியைச் சிறப்பித்தமையான் இதற்கு 'வெருவரு புனற்றார்' என்பது பெயர் என்று பழைய உரைகாரர் கூறுவர்.

## பதிகம்

வடவ ருட்கும் வான்றோய் வெல்கொடிக்
குடவர் கோமான் நெடுஞ்சேர லாதற்குச்
சோழன் மணக்கிள்ளி யீன்ற மகன்
கடவுட் பத்தினிக் கற்கோள் வேண்டிக்
கானவில் கானங் கணையிற் போகி
ஆரிய வண்ணலை வீட்டிப் பேரிசை
இன்ப லருவிக் கங்கை மண்ணி
இனந்தெரி பல்லான் கன்றொடு கொண்டு
மாறா வல்வி லிடும்பிற் புறத்திறுத்து
உறுபுலி யன்ன வயவல் வீழச்
சிறுகுரல் நெய்தல் வியலூர் நூறி
அக்கரை நண்ணிக் கொடுகூ ரெறிந்து
பழையன் காக்குங் கருஞ்சினை வேம்பின்
முழாரை முழுமுதல் துமியப் பண்ணி
வாலிழை கழித்த நறும்பல் பெண்டிர்
பல்லிருங் கூந்தல் முரற்சியாற்
குஞ்சர வொழுகை பூட்டி வெந்திறல்
ஆராச் செருவிற் சோழர்குடிக் குரியோர்
ஒன்பதின்மர் வீழ வாயிற்புறத் திறுத்து

நிலைச் செருவி ஞற்றலை யறுத்துக்
கெடலருந் தானையொடு
கடல்பிறக் கோட்டிய செங்குட்டுவனைக்
கரணம் அமைந்த காசறு செய்யுட்
பரணர் பாடினர் பத்துப்பாட்டு.

அவைதாம்: சுடர்வீ வேங்கை. தசும்புதுளங்கிருக்கை, ஏரு வேணி, நோய்தபுநோன்றொடை. ஊன்றுவையடிசில், கரைவாய்ப்பருதி, நன்னுதல் விறலியர், பேரெழில் வாழ்க்கை, செங்கைமறவர், வெருவருபுனற்றார். இவை பாட்டின்பதிகம்.

பாடிப்பெற்றபரிசில்: உம்பற்காட்டுவாரியையும் தன்மகன் குட்டுவன் சேரலையுங் கொடுத்தான் அக்கோ.

கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் ஐம்பத்தையாண்டு வீற்றிருந்தான்.

(கு-பு) இப்பதிகம் ஆசிரியர் காலத்திற்குப் பிற்பட்ட ஒருவர் இயற்றிச் சேர்த்தது; பாடிப் பெற்ற பரிசில், மன்னன் ஆட்சிக் காலம் என்பவற்றை விவரமாகக் கூறலின் இவர் பரணர் காலத்திற்கு மிகப் பிற்பட்டவராக இருந்திருக்க முடியாது. இப்பதிகத்தை இயற்றியவர் பதிற்றுப்பத்தைத் தொகுத்தவர் என்று கொள்ளலாம். இதற்கு எதிரிடையாக, 'பதிகங்கள் உரைப்பிரதிகளில் மாத்திரம் காணப்படுதலின் அவற்றை இயற்றினோர் நூலாசிரியரோ தொகுத்தோரோ அல்லர் என்பதும் தெரிகின்றன' என்று உ. வே. சாமிநாத ஐயர் கூறுவார். உண்மை விளங்குவது எளிதன்று.

வடவர்: வடநாட்டு அரசர். உட்கும்: அஞ்சுதற்குக் காரணமான. வான்தோய் வெல்கொடி: மிகவும் உயர்ந்த வெல்லும் கொடியையுடைய. குடவர் கோமான்: சேர மன்னன். நெடுஞ்சேரலாதற்குச் சோழன் மணக்கிள்ளி யீன்ற மகன்: நெடுஞ்சேரலாதற்குச் சோழன் மகள் மணக்கிள்ளி யீன்ற மகன். கடவுட்பத்தினி:பத்தினிக்கடவுள் என்று மாறுக. கான்நவில் கானம்:காட்டின் தன்மை மிகுந்த காட்டில்; கணையிற்போகி: அம்பைப் போல விரைந்து சென்று; ஆரிய அண்ணலை: ஆரிய அரசனை வென்று. விட்டி: தோற்கடித்து கங்கைமண்ணி: கங்கைநீரில் நீராட்டி. இடும்பில்: இடும்பாதவனம். வல்வில்:வல்வில் ஓரி என்னுமிடத்து வல்வில்-பல இலக்கங்களை ஒரே காலத்தில் ஊடுருவிச் செல்லவல்ல வில்

என்றமை காண்க. (புறம். 152:1-6). இராமன் மாமரத்தை எய்தமை ஈண்டுக் காண்க. வயவர்:வீரர். முழாரை ; முழவு போன்ற அரை; முழாவரை எனற்பாலது முழாரை என்று மருவிற்று. இழைகழித்த பெண்டிர்:கணவனையிழந்த மனைவியர் அணிகளைக் களைதல் மரபு. 'மெல்லியல் மகளிரும் இழை கழித்தனரே' (புறம்.224:17). வால் இழை என்புழி வால்-வெண்மை என்று கொண்டு அதனை முத்தாரம் என்று பொருள் கூறுதலினும், தூய இழை எனல் சிறக்கும். குஞ்சர வொழுகை:யானைகளின் செலவு. வாயிற்புறம் : நேரி வாயில் என்னும் ஊர்.

நிலைச்செரு:எப்போதும் இடையறாது செய்யப்படும் போர்.

கரணம் அமைந்த:பாட்டின் உறுப்புக்கள் சிறக்க அமைந்த.

உம்பற் காட்டு வாரி:யானைக் கானத்திலிருந்து வரும் வருவாய்.

தன் மகன் குட்டுவன் சேரலைப்பரணரிடம் அவர் மாணவனாகக் கொடுத்தான் செங்குட்டுவன் என்க.

## 74. புறநானூறு - 4.

வாள், வலந்தர மறுப்பட்டன
செவ்வானத்து வனப்புப் போன்றன
தாள், களங்கொளக் கழல்பறைந்தன
கொல்ல லேற்றின் மருப்புப்போன்றன
தோல், துவைத்தம்பிற் றுளைதோன்றுவ
நிலைக்கொராஅ இலக்கம் போன்றன
மாவே, எறிபதத்தான் இடங்காட்டக்
கறுழ்பொருத செவ்வாயான்
எருத்துவவ்விய புலிபோன்றன
களிறு, கதவெறியாச் சிவந்துராஅய்
நுதிமழுங்கிய வெண்கோட்டான்
உயிருண்ணுங் கூற்றுப்போன்றன
நீயே, அலங்குளைப் பரீஇயிவுளிப்
பொலந்தேர்மிசைப் பொலிவுதோன்றி
மாக்கடல் நிவந்தெழுதருஞ்

செஞ்ஞாயிற்றுக் கவினைமாதோ
அனையை யாகன் மாறே
தாயில் தூவாக் குழவி போல
ஓவாது கூஉம்நின் உடற்றியோர் நாடே.

திணை - வஞ்சி; துறை - கொற்றவள்ளை.
சோழன் உருவப்பஃறேரிளஞ்சேட் சென்னியைப் பாடியது.

(கு-பு) இப்பாடலில் சென்னியின் வாள், கழல், கேடயம் குதிரைகள், களிறுகள் மற்றும் அச்சென்னி என்போர் போர்க்கள நிலையில் வருணிக்கப்படுகின்றனர். இவை யாவும் அரிய உவமைகள்.

வலம்:வெற்றி; மறு:குருதிக்கறை; தர—தருதலால்; வனப்பு:அழகு; தாள்:கால்; பறைந்தன:நீங்கின; ஏறு:எருது; மருப்பு:கொம்பு; தோல்:கேடயம்; தோலாற் செய்யப் படுதலின் தோல்ஆயிற்று. துவைத்து:ஒலித்து; ஓரா:நீங்காத; இலக்கம்:லக்ஷியம்; மா:குதிரை; கறுழ்:முகக்கருவி; எறிய: எறிந்து; சிவந்து:சினந்து; உராய்:தேய்த்து; கோடு:தந்தம்; நீ: சோழன் உருவப்பஃறேர் இளஞ்சேட் சென்னி அலங்கு: அசைகின்ற; உளை:தலையாட்டம் என்னும் அணி; பரி:வேகம்; இவுளி:குதிரை; பொலந்தேர்:பொற்றேர்; பொலிவு தோன்றி: பொலிவுடன் தோன்றி; கவினை:அழகினையுடைய.

மாறு:காரணப் பொருள் குறிக்கும் இடைச் சொல்' தூவா:உண்ணாத. ஓவாது:ஒழியாது. கூஉம்:கூப்பிடும். உடற்றியோர்:சினப்பித்தோர். நாடு:நாட்டு மக்கள்.

*14—15*: 'பலர் புகழ் ஞாயிறு கடற்கண்டாங்கு' என்னும் திருமுருகு:2காண்க.

'அனையை யாகன் மாறே'—இதே அடி புறம். 20:20 லும் காண்க.

'தாயில் தூவாக் குழவி போல'—புறம்.230:7;379:14-15 காண்க.

இப்பாடல் 14-ம் வரியில் பாட்டுடைத் தலைவனது பெயர்க் காரணம் கூறப்பட்டுள்ளமை காண்க.

## 75. புறநானூறு - 63

எனைப்பல் யானையும் அம்பொடு துளங்கி
விளைக்கும் வினையின்றிப் படையொழிந் தனவே

விறற்புகழ் மாண்ட புரவி யெல்லாம்
மறத்தகை மைந்தரொ டாண்டுப்பட்டனவே
தேர்தர வந்த சான்ருே ரெல்லாந்
தோல்கண் மறைப்ப ஒருங்குமாய்ந் தனரே
விசித்துவினை மாண்ட மயிர்க்கண் முரசம்
பொறுக்குந ரின்மையின் இருந்துவிளிந் தனவே
சாந்தமை மார்பில் நெடுவேல் பாய்ந்தென
வேந்தரும் பொருதுகடத் தொழிந்தனர் இனியே
என்ணு வதுகொல் தானே கழனி
ஆம்பல் வள்ளித் தொடிக்கை மகளிர்
பாசவல் முக்கித் தண்புனற் பாயும்
யாண ரருஅ வைப்பிற்
காமர் கிடக்கையவ ரகன்றலை நாடே.

திணை - தும்பை; துறை - தொகைநிலை.

சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனும் சோழன் வேற்பஃ றடக்கைப் பெருவிறற் கிள்ளியும் போர்ப்புறத்துப் பொருது வீழ்ந்தாரை அக்களத்திற் பாடியது.

(கு-பு) துளங்கி : கலங்கி; வினை : போர்; படையொழிந்தன: படையால் ஒழிந்தன; விறல் : வெற்றி; மாண்ட : பெருமையுடைய; புரவி:குதிரை; மைந்தர்:வீரர். ஆண்டு:அக்காலத்திலேயே; சான்ருேர்:வீரர். 'சான்ருேர் மெய்ம்மறை' என்னும் பதிற்றுப் பத்தும் காண்க. தோல் : கேடயம். விசித்து : இழுத்துக்கட்டி; மயிர்க்கண்முரசம்:மயிர் சீவாது போர்க்கப்பட்ட கண்ணையுடைய முரசு. ஆம்பல்வள்ளி : ஆம்பல் தண்டு; பாசவல் முக்கி : பசிய அவலைத் தின்று. புனற்பாயும் : புனலில் நீராடப்புகும்; யாணர்:புது வருவாய்; அருஅ:நீங்காத; காமர்: அழகிய.

புறம். 352: 5-6 காண்க.''ஆம்பல் வள்ளித் தொடிக்கை மகளிர்
குன்றேறிப்புனற்பாயிற்—''

## 76. புறநானூறு - 141

பாணன் சூடிய பசும்பொற் றுமரை
மாணிழை விறலி மாலையொடு விளங்கக்

கடும்பரி நெடுந்தேர் பூட்டுவிட்ட டசைஇ
ஊரீர் போலச் சுரத்திடை யிருந்தனிர்
யாரீ ரோவென வினவ லானுக்
காரெ னொக்கற் கடும்பசி யிரவல
வென்வே லண்ணற் காணா வூங்கே
நின்னினும் புல்லியேம் மன்னே இனியே
இன்னே மாயினேம் மன்னே என்றும்
உடாஅ போரா வாகுத லறிந்தும்
படாஅ மஞ்ஞைக் கீத்த எங்கோ
கடாஅ யானைக் கலிமான் பேகன்
எத்துணை யாயினும் ஈத்தல் நன்றென
மறுமை நோக்கின்றோ அன்றே
பிறர், வறுமை நோக்கின்றவன் கைவண் மையே.

திணை - பாடாண்டிணை; துறை - பாணாற்றுப்படை, புலவராற்றுப் படையுமாம். வையாவிக்கோப் பெரும்பேகனைப் பாடியது.

(கு-பு) பாணற்குப் பொற்றாமரை அளித்தல் புரவலர் மரபு. மாண் இழை:மாட்சிமைப்பட்ட அணி. பரி:குதிரை; விரைவு எனலுமாம்; அசைஇ:இளைப்பாறி; ஆனா:அமையாத; வென் வேல் : வெற்றிவேல்; காணாவூங்கே : காண்பதற்கு முன்பே. புல்லியேம்:வறுமையுடையேம்; மன்:அசை; இன்னேம்:இத் தன்மையினேம்; உடா:உடுத்திக்கொள்ள மாட்டா; போரா: போர்த்திக் கொள்ள மாட்டா; படாம்:போர்வை; மஞ்ஞை: மயில்; படாம் மஞ்ஞைக்கு ஈத்த எங்கோ:பேகன். கலிமான்: ஊக்கம் மிகுந்த குதிரை; எத்துணை:எவ்வளவு. அவன் வள் ளற்றன்மை தனது மறுமைப் பயனை நோக்க பிறரது வறுமைத் தன்மையைக் கருதிற்று என்க. வள்ளன்மைக்கு ஆன்மார்த்தப் பொருள் காணாது உலகிற் பொருள் கண்டார் பரணர் ஈண்டு. பண்டைத் தமிழிலக்கியத்தில் இவ்வாறு ஒரு பொருள் கண்ட பெருமை பரணரைச் சாரும்.

## 77. புறநானூறு - 142

அறுகுளத் துகுத்தும் அகல்வயற் பொழிந்தும்
உறுமிடத் துதவா துவர்நிலம் ஊட்டியும்
வரையா மரபின் மாரி போலக்

கடாஅ யானைக் கழற்காற் பேகன்
கொடைமடம் படுத வல்லது
படைமடம் படான்பிறர் படைமயக் குறினே-

திணை – பாடாண்டிணை; துறை - இயன்மொழி; வையாவிக்கோப் பெரும்பேகனைப் பாடியது.

(கு-பு) அறுகுளம்:நீர் அற்ற குளம்; உறும் இடம்:பொருந்த வேண்டிய இடம்; உதவாது:பயன்படாது; உவர்நிலம்:களர் நிலம்; கொடை மடம்:தான் ஈந்ததைப் பெற்றூர் பயன் படுத்தார், படுத்த முடியாது என்பதை உணர்ந்தும் ஈதற் பெருமை நோக்கி ஈயும் தன்மை; படைமடம்:'வீரரல்லாதார் மேலும், முதுகிட்டார் மேலும், புண்பட்டார் மேலும், மூத் தார் இளையார் மேலும் செல்லுதல்'. படைமயக்குறின்: படை வந்து போரில் கலந்து கொளின்,

சூளாமணி 9:10—'படைமயக் குற்ற போதும்
படைமடம் ஒன்றிலாதான்'

என்னும் மேற்கோளும் காண்க.

## 78. புறநானூறு - 144

அருளா யாகலோ கொடிதே இருள்வரச்
சீறியாழ் செவ்வழி பண்ணி யாழநின்
காரெதிர் கானம் பாடினே மாக
நீனறு நெய்தலிற் பொலிந்த வுண்கண்
கலுழ்ந்துவா ரரிப்பனி பூணகம் நனைப்ப
இனைத லானு ளாக இளையோய்
கிளையை மன்னெங் கேள்வெய் யோற்கென
யாந்தற் றொழுதனம் வினவக் காந்தள்
முகைபுரை விரலிற் கண்ணீர் துடையா
யாமவன் கிளைஞரே மல்லேம் கேளினி
எம்போ லொருத்தி நலனயந் தென்றும்
வருஉ மென்ப வயங்குபுகழ்ப் பேகன்
ஒல்லென வொலிக்குந் தேரொடு
முல்லை வேலி நல்லூ ரானே.

திணை - பெருந்திணை; துறை - குறுங்கலி, [1] தாபதநிலையுமாம். வையாவிக்கோப் பெரும்பேகனைக் கண்ணகி காரணமாகப் பாடியது.

(கு-பு) அருளாய் ஆகலோ:அருள் செய்யாய் எனின்; இருள் வர:மாலைப்பொழுது வர; கார்:மழை; கானம்:காடு; நீல் நறு: நீல நறு; கலுழ்ந்து:கலங்கி; பனிபூணகம்:மார்பு; இனைதல்: வருந்துதல்; ஆனாளாக : அமையாதவளாய்; இளையோய் : என்றது பேகன் மனைவி கண்ணகியை விளித்து; எம்கேள் வெய்யோன் : எமது நட்பை விரும்புபவன்; தொழுதனம் வினவ:தொழுது வினவ என்று முற்றெச்சம்; முகை:மொட்டு; புரை:உவம உருபு; துடையா:துடைத்து; 'நல்லூரானே வரும் என்ப' என்றாள் என்று கூட்டுக. என்றாள் என்னும் சொல் வருவிக்க வேண்டும்.

இப்பாட்டைக் 'கைக்கிளை வகைப்பாடாண் பாட்டு' என்றார் நச்சினார்க்கினியர்: தொல். புறத்திணை.

சூ. 35. உறை

## 79. புறநானூறு - 145

மடத்தகை மாமயில் பனிக்குமென் றருளிப்
படாஅம் ஈத்த கெடாஅ நல்லிசைக்
கடாஅ யானைக் கலிமான் பேக
பசித்தும் வாரேம் பாரமும் இலமே
களங்கனி யன்ன கருங்கோட்டுச் சீறியாழ்
நயம்புரிந் துறையுநர் நடுங்கப் பண்ணி
அறஞ்செய் தீமோ அருள்வெய் யோயென
இஃதியா மிரந்த பரிசிலஃது இருளின்
இனமணி நெடுந்தே ரேறி
இன்னா துறைவி யரும்படர் களைமே.

திணை - பெருந்திணை; துறை - குறுங்கலி, தாபதநிலையுமாம். வையாவிக்கோப் பெரும்பேகனைக் கண்ணகி காரணமாகப் பாடியது.

(கு-பு) மடத்தகை: மடமைத்தன்மை; பனிக்கும் : குளிரால் நடுங்கும்; பாரம் : பரிக்கப்படுவது; சுமக்கப்படுவது; நயம்: இசைநயம்; புரிந்து:விரும்பி; நடுங்க:இசையின்பத்தால் தலை யசைக்க; பண்ணி : இசைத்து; ஈமோ:தருவாயாக; அருள் வெய்யோய் : அருளை விரும்புவோய்; நின்னோடு தொடர்பில் லாத மயில் போன்ற பிற உயிர்களுக்கும் அருளவல்லாயாகிய நீ, நின்னை அண்டி இருப்பவளாகிய நின் மனைவிக்கு அன்பு

செய்வாயாக என்பதுபட நின்றது. உறைவி: உறைகின்ற வள் - ஆகிய கண்ணகி.

இப்பாடல் 5-ம் வரியைப் புறம். 127:1ஆம் வரியோடு காண்க. சங்கப்புலவர்கள் உவமையேயன்ற உவம வாசகத் தொடரையும் பலகாலும் ஒன்றே போல் அமைத்தமை காண்க.

## 80. புறநானூறு - 336

வேட்ட வேந்தனும் வெஞ்சினத் தினனே
கடவன கழிப்பவள் தந்தையுஞ் செய்யான்
ஒளிறுமுகத் தேந்திய வீங்குதொடி மருப்பிற்
களிறுங் கடிமரஞ் சேரா சேர்ந்த
ஒளிறுவேல் மறவரும் வாய்மூழ்த்தனவே
இயவரும் அறியாப் பல்லியங் கறங்க
அன்னோ, பெரும்பே துற்றன்றிவ் வருங்கடி மூதூர்
அறனிலள் மன்ற தானே விறல்மலை
வேங்கை வெற்பின் விரிந்த கோங்கின்
முகைவனப் பேந்திய முற்று இளமுலைத்
தகைவளர்த் தெடுத்த நகையொடு
பகைவளர்த் திருந்தவிப் பண்பில் தாயே.

திணை - காஞ்சி; துறை - மகட்பாற்காஞ்சி

(கு-பு) வேட்ட:விரும்பிய; மகட்பாற்காஞ்சியாதலின் மணம் செய்தற்கு விரும்பிய என்க; கடவன:செய்ய வேண்டுவன; கதிப்பு:செய்துவிடுதல்; கடிமரம்:காவல் மரம்; மூழ்த்தனர்: முகிழ்த்தனர்; வாய்வாளாமை மேற்கொண்டனர்; இயவர்: வாத்தியக்காரர். இயம்:வாச்சியம். பேது:மயக்கம்; முகை: அரும்பு. நகை:மகிழ்ச்சி. 'பண்பில் தாய் அறனிலள் மன்ற' என்று கூட்டுக.

## 81. புறநானூறு - 341

வேந்து குறையுறவுங் கொடாஅன் ஏந்துகோட்டு
அம்பூந் தொடலை யணித்தழை யல்குற்
செம்பொறிச் சிலம்பி னிளையோள் தந்தை

எழுவிட் டமைத்த திண்ணிலைக் கதவின்
அரைம ணிஞ்சி நாட்கொடி நுடங்கும்
... ... ...
புலிக்கணத் தன்ன கடுங்கட் சுற்றமொடு
மாற்ற மாறுன் மறலிய சினத்தன்
பூங்கோ ளௌனஏஎக் கயம்புக் கனனே
விளங்கிழைப் பொலிந்த வேளா மெல்லியற்
சுணங்கணி வனமுலை யவளொடு நாளை
மணம்புகு வைகல் ஆகுத லொன்று
ஆரம ருழக்கிய மறங்கிளர் முன்பின்
நீளிலை யெஃக மறுத்த வுடம்பொடு
வாரா வுலகம் புகுத லொன்றெனப்
படைதொட் டனனே குருசில் ஆயிடைக்
களிறுபொரக் கலங்கிய தண்கயம் போலப்
பெருங்கவின் இழப்பது கொல்லோ
மென்புனல் வைப்பினித் தண்பணை யூரே.

திணை - காஞ்சி; துறை - மகட்பாற்காஞ்சி.

(கு-பு) வேந்து:அரசன்; குறையுறவும்:கேட்கவும்; கோடு: பக்கம்; தொடலை:மாலை, தொடுக்கப்பட்டது என்க; 'தொட லைக் குறுந்தொடி' (குறள் 1135) காண்க. 'வேந்து குறையுற வும் இளையோள் தந்தை கொடான்' என்று கூட்டுக. எடு: கதவைத் திறக்கும்போது மேலே எழுப்பப்படும் மரம். 'எழுவும் சீப்பும்' (சிலப். 15:215) அரைமண் இஞ்சி:அரைத்த மண்ணால் அமைக்கப்பட்ட மதில்; நாட்கொடி:நல்ல நாளிற்கு அறிகுறி யாகக் கட்டப் பெற்ற கொடி (நாள் மங்கலம் என்புழிப் போல). நாள்தோறும் செய்த வெற்றிக்குக் கட்டப்பெற்ற கொடி எனலுமாம். மாற்றம்:மாறுபட்டுச் சொல்லப்படுவது. மறலிய:போர் செய்ய எழுந்த; பூக்கோள்:போருக்கு உரிய பூவைக் கொள்ளுதல் அல்லது அணிதல்; ஏஎய்:ஏவி; கயம்புக்கனின்:நீராடற்குக் குளத்தில் இறங்கினன்; வேளா: மணமாகாத; எஃகம்:வேல்; வளாவுலகம்:போரில் மடிந்த வீரர் புகும் வீரசுவர்க்கம்.

## 82. புறநானூறு - 343

மீனுடுத்து நெற்குவைஇ
மிசையம்பியின் பனைமறுக்குந்து

மனைக்குவைஇய கறிமுடையாற்
கலிச்சும்மைய கரைகலக்குறுந்து
கலந்தந்த பொற்பரிசங்
கழித்தோணியாற் கரைசேர்க்குந்து
மலைத்தாரமுங் கடற்றாரமுந்
தலைப்பெய்து வருநர்க்கீயும்
புனலங் கள்ளின் பொலந்தார்க் குட்டுவன்
முழங்குகடல் முழவின் முசிறி யன்ன
நலஞ்சால் விழுப்பொருள் பணிந்துவந்து
கொடுப்பினும்
புரைய ரல்லோர் வரையல ளிவளெனத்
தந்தையுங் கொடாஅ னாயின் வந்தோர்
வாய்ப்பட இறுத்த ஏணி யாயிடை
வருந்தின்று கொல்லோ தானே பருந்துயிர்த்து
இடைமதிற் சேர்க்கும் புரிசைப்
படைமயங் காரிடை நெடுந லூரே.

திணை - காஞ்சி; துறை - மகட்பாற்காஞ்சி.

(கு-பு) நொடுத்து:விற்று; அம்பி:படகு; மறுக்குந்து:மறுகச் செய்யும்; கறிமூடை : மிளகு பொதி; மூடையை இக்காலத்தார் மூட்டை என்பர். கலிச்சும்மைய : மிகுந்த ஒலியை யுடையன; கலக்குறுந்து:கலக்கும். தோணி : ஓடம்; சேர்க்குந்து : சேர்க்கும்; தாரம் : பல பண்டங்கள்; தலைப்பெய்து: ஒன்றாகக் கலந்து; புனலங்கள்:ஆறாகப் பெருகும் கள்; முசிறி: ஊர்; பொலம்:பொன். புரையர்:ஒத்தவர்; வாய்ப்பட : வழிபட; ஏணி:மதில் மீது ஏறுதற்கு இடப்படும் நூலேணி; எல்லை என்பாருமுளர். சேக்கும்:இளைப்பாறும்.

## 83. புறநானூறு - 348

வெண்ணெல் லரிஞர் தண்ணுமை வெரீஇக்
கண்மடற் கொண்ட தீந்தேன் இரியக்
கள்ளரிக்குங் குயஞ் சிறுசின்
மீன்சீவும் பாண்சேரி
வாய்மொழித் தழும்பன் ஊணூ ரன்ன
குவளை யுண்க ணிவளைத் தாயே

ஈனு ளாயின ளாயின் ஆனுது
நிழல்தொறும் நெடுந்தேர் நிற்ப வயின்தொறும்
செந்நுதல் யானை பிணிப்ப
வருந்தல மன்னெம் பெருந்துறை மரனே.

திணை - காஞ்சி; துறை - மகட்பாற்காஞ்சி.

(கு-பு) சிறுசின்:சிறுமை உருவத்தாலும் என்ருலும் கொள்க; 'சின் மீன்' (ஐங்குறு. 48,49) என்னும் ஆட்சி காண்க. 'மீன் சீவும் பாண்சேரி' என்னும் அடியில் தன்மை நவிற்சியணி அழகு பெற விளங்குதல் காண்க. வாய்மொழி : உண்மை; மெய்ம்மை. ஊனூர் : ஓர் ஊர். செந்நுதல் : (கோட்டைக் கதவையிடித்து ஏற்பட்ட புண்ணுற்) சிவந்த நுதலையுடைய; மரன்:ஈண்டுக்கடிமரம்.

## 84. புறநானூறு - 352

தேஎங்கொண்ட வெண்மண்டையான்
... ... ... கறக்குந்து
அவல்வகுத்த பசுங்குடையாற்
புதல்முல்லைப் பூப்பறிக்குந்து
ஆம்பல் வள்ளித் தொடிக்கை மகளிர்
குன்றேறிப் புனற்பாயிற்
புறவாயாற் புனல்வள ...
... ... நொடைநறவின்
மாவண் தித்தன் வெண்ணெல் வேலி
உறந்தை யன்ன உரைசால் நன்கலங்
கொடுப்பவுங் கொளாஅ னெ ... ...
... ... ர்தந்த நாகிள வேங்கையிற்
கதிர்த்தொளி திகழும் நுண்பல் சுணங்கின்
மாக்கண் மலர்ந்த முலையள் தன்னையுஞ்
சிறுகோ லுளையும் புரவிெ... ......
... ... ... யமரே.

திணை - காஞ்சி; துறை - மகட்பாற்காஞ்சி.

(கு-பு) தேம்:தேன், கள்; மண்டை:கள் முகக்கும் பாத்திரம்; கறக்குந்து:கறக்கும்; அவல்:பள்ளம்; குடை:பனமட்டையாற்

செய்யப்பட்ட ஒரு கருவி; பறிக்குந்து : பறிக்கும்; வள்ளி: வளை; தொடி : வளை கழன்று வீழாமற்றடுக்க உதவுவது; நொடை : விலை; நொடுக்கப்படுவது; நன்கலம் : நல்ல அணிகலன்கள்; தித்தன்:ஒரு சோழன் பெயர்; உறந்தை:உறையூர்.

'நொச்சிவேலித் தித்தன் உறந்தை' (அகம். 122) என்னும் ஆட்சியும் காண்க. 'வேங்கைப் பூப் போன்ற சுணங்கு' என்க. மாக்கண் : கரிய கண். தன்னை:தன் ஐ, தமையன்.

## 85. புறநானூறு - 354

அரைசு தலைவரினு மடங்க லானு
நிரைகா ழெஃகம் நீரின் மூழ்கப்
புரையோர் சேர்ந்தெனத் தந்தையும் பெயர்க்கும்
வயலமர் கழனி வாயிற் பொய்கைக்
கயலார் நாரை யுகைத்த வாளை
புனலாடு மகளிர் வளமனை யொய்யும்
ஊர்கவின் இழப்பவும் வருவது கொல்லோ
சுணங்கணிந் தெழிலிய அணந்தேந் திளமுலை
வீங்கிறைப் பணைத்தோள் மடந்தை
மான்பிணை யன்ன மகிழ்மட நோக்கே.

திணை - காஞ்சி; துறை - மகட்பாற்காஞ்சி.

(கு-பு) ஆனு : அமையாத; காழ்எஃகம் : காம்பினையுடைய வேல்; நீரில் மூழ்குதல் 'மண்ணு மங்கல' மாயிற்று. 'தந்தை எஃகத்தைப் பெயர்க்கும்' என்க. கழனி வாயில் : கழனிக்குச் செல்லும் வழி; கயல் ஆர்:கயல் மீனை உண்ணும்; வாளை:மீன் வகை; நாரையுகைத்த வாளை என்புழி 'நாரையை யுகைத்த வாளை' என்று உருபு விரிக்க. ஒய்யும் : கொண்டு செல்லும்; கவின்:அழகு; அணந்து:மேல் நோக்கி; ஏந்து:உயர்ந்த; மான் பிணை:பெண்மான்; மகிழ் : நோக்கு மகிழ்ச்சிபாற் சிறந்தது; நோக்குச் சிறத்தலாற் மகிழ்ச்சி பிறந்தது. 'பிணையெழின் மானோக்கு' என்றார் கலியுள்ளும் (கலி. 58:2). பணைத்தோளையும் மட நோக்கினையும் கூறினர்.

'அகலல்குல் தோள் கண்ணென மூவழிப் பெருகி' என்ற கலித்தொகை காண்க (கலி. 108:3).

## 86. புறநானூறு - 369

இருப்புமுகஞ் செறித்த ஏந்தெழில் மருப்பிற்
கருங்கை யானை கொண்மூ வாக
நீள்மொழி மறவர் எறிவன ருயர்த்த
வாள்மின் னுக வயங்குகடிப் பமைந்த
குருதிப் பலிய முரசு முழக்காக
அரசராப் பணிக்கும் அணங்குறு பொழுதின்
வெவ்விசைப் புரவி வீசுவளி யாக
விசைப்புறு வல்வில் வீங்குநாண் உகைத்த
கணைத்துளி பொழிந்த கண்ணகன் கிடக்கை
ஈரச் செறுவயின் தேரே ராக
விடியல் புக்கு நெடிய நீட்டிநின்
செருப்படை மிளிர்த்த திருத்துறு பைஞ்சாற்
பிடித்தெறி வெள்வேல் கணையமொடு வித்தி
விழுத்தலை சாய்த்த வெருவரு பைங்கூழ்ப்
பேய்மகள் பற்றிய பிணம்பிறங்கு பல்போர்வு
கணநரி யோடு கழுதுகளம் படுப்பப்
பூதங் காப்பப் பொலிகளந் தழீஇப்
பாடுநர்க் கிருந்த பீடுடை யாள
தேய்வை வெண்காழ் புரையும் விசிபிணி
வேய்வை காணு விருந்திற் போர்வை
அரிக்குரற் றடாரி யுருப்ப வொற்றிப்
பாடி வந்திசின் பெரும பாடான்று
எழிலி தோயும் இமிழிசை உருவிப்
பொன்னுடை நெடுங்கோட் டிமையத் தன்ன
ஓடை நுதல ஒல்குத லறியாத்
துடியடிக் குழவிய பிடியிடை மிடைந்த
வேழ முகவை நல்குமதி
தாழா ஈகைத் தகைவெய் யோயே.

திணை - வாகை; துறை - மறக்களவழி, ஏர்க்கள உருவகமுமாம்.
சேரமான் கடலோட்டிய வேல்கெழு குட்டுவனைப் பாடியது.

(கு-பு) இரும்பு:யானையின் தந்தப் பூண்; கொண்மூ : மேகம்; கருங்கை : வலிய கை; நீள்மொழி : சபதம்; மறவர் : வீரர். கடிப்பு:குறுந்தடி; குருதிப் பலிய முரசு: இரத்தமாகிய பலி

யையுடைய முரசம். அரசு அரா:பகைமன்னர்களாகிய பாம்பு கள் புரவி:குதிரை; வளி : காற்று; கணைத்துளி : அம்பாகிய மழைத்துளிகள்; செறுவயில்:போர்க்களமாகிய வயலினிடத் தில். படைமிளிர்த்த:ஆயுதமாகிய படையால் கீழ் மேலாக மறிக்கப்பட்ட; வேலைக் கணையமொடு வித்தி : வேலையும் கணைய மரத்தையும் விதையாக விதைத்து. கணையம்:கதவின் குறுக்கே போடப்படும் மரம். கூழ்:பயிர்; கழுது:பேய்வகை; தேய்வை வெண்காழ்:சந்தனக்கட்டை; வேய்வை : இசையிற் குற்றம்; தடாரி:ஒருவகைப்பறை. உருப்பு:சூடு பிறக்குமளவு; ஒற்றி:தட்டி. பாடு ஆன்று : ஓசை நிறைந்து; வந்திசின் : வந் தேன்; எழிலி:மேகம்; ஓடை:யானையின் முகப்படாம்; நுதல: நெற்றியையுடையது; துடியடி:உடுக்கையின் கண் போன்ற அடியையுடைய; குழவியபிடி : கன்றினை விட்டுப் பிரியாத பெண் யானை; நல்குமதி : அளிப்பாயாக; அதுவே போதும் என்று பொருள்படுதலின் 'மதி' என்னும் சொல் இன்றைய மலையாளத்திற் போலப் பண்டைத் தமிழிலும் போதும் என்னும் பொருட்டாயிற்று. வேழமுகவை : யானையினைப் பரிசிலாகப் பெறும் நிலை.

'யானையினை மேகமாகவும், வாளினை மின்னலாகவும், குதிரைகளைக் காற்றாகவும், தேரினை ஏராகவும், வேலையும் கணையத்தையும் விதையாகவும் கொண்ட போர்க்களத்தே' என்க.






# பெயர் அகராதி

அஃதை: பரிசிலர்க்குக் களிற்ருெடு நன்கலன் ஈயும் நான் மகிழிருக்கையுடைய ஒரு சிற்றரசன். அகம் 76:3.
'அகுதை' காண்க.

அகுதை: இதனை அஃதை என்றும் எழுதுப. ஆய் எயினன் மிஞிலியோடு பொருதுபட்ட போது நன்னன் உதவிக்கு வரமறுத் தாஞக, வேண் மகளிர் பேராரவாரம் செய்து அழுதனர். அஞ்ஞான்று அவர் களுடைய வருத்தத்தை நீக்கியவன். அகம் 208:18

'அஃதை' காண்க.

அட்டவாயில்: நெடுங்கொடி நுடங்கும் தெருக்களை யுடையதோர் ஊர். அகம் 326:5

அதிகன்: பாழிப் போர்க்களத்தில் மிஞிலியால் கொல்லப்பட்டவன். அகம் 142:13.
இரவலர்க்கு அவர் விரும்பிய விதமே ஈயும்வள்ளல். அகம் 162:18
பசும்பூட் பாண்டியனது படைத் தலை வன். வாகைப் பறந்தலையில் கொங்க ரால் கொல்லப்பட்டான். குறுந். 393:4

அரிமணவாயில் உறத்தூர்: இவ்வூரில் எவ்வி என்பான் தன் பகை வர்களை வென்ருன். அகம் 266:13

அலைவாய்: சேய் கோயில் கொண்டுள்ள திருச்சீ ரலைவாய் (திருச்செந்தூர்). அகம் 266:20

அழிசி: ஆர்க்காட்டிற்குரிய ஒரு தலைவன். குறுந். 258:7

அழுந்தூர்: கரிகாலன் வெண்ணியில் வேளிரையும் வேந்தரையும் வென்றபோது இவ்வூரில் பேரார்ப்பு எழுந்தது. (கரிகாலன்

இவ்வூர் வேளிரிடை மகட் கொண்டான் என்பதறிக) அகம் 246:14
'அழுந்தை' காண்க.

அழுந்தை: அழுந்தூர் என்னும் ஊர். இவ்வூரில் திதியன அன்னி மிஞிலி பொருட்டுக் கோசரை வென்றான். அகம் 196:11
அருந்தூர் காணக.

அன்னி மிஞிலி: இவள் தந்தையின் கண்களைக் களைந்து விட்டமையால், இவள் திதியனைக் கொண்டு கோசரை வென்று சினம் தீர்ந்தாள். அகம் 196:12; 262:12.

ஆட்டனத்தி: இவன் சேர நாட்டுக் கூத்தாடி. கழாரில் ஒரு விழாவின் போது காவிரியாறு இவனை ஈர்த்துச் சென்றது. அகம் 36:16; 376:10; 396:13.

ஆதிமந்தி: காவிரியாற்றில் ஆடும் போது தனது காதலனை அத்தியையிழந்து வருந்தியவள். அகம் 76:10; 135:5.
ஆட்டனத்தியின் காதலி. அகம் 222:10; 236:20.

ஆய்: தலையாறு என்னும் இடத்திற்கு உரியன். இவன் வல்லார், அல்லார் ஆகிய எல்லார்க்கும் வரையாது வேண்டும் சோறும் பரிசிலும் ஈந்தவன்.
அகம் 152:21

ஒரு தலைவன் - இவனது கவிரம் என்னும் மலை } அகம் 198:14

ஆய் எயினன்: இவன் மிஞிலியொடு பொருதுபட்டனன். அகம் 148:7; 181:7; 396:4.

ஆரியப் பொருநன்: பாணன் என்பானோடு பொருது மற்போரில் தோற்று இறந்தவன்.
அசம் 386:5

ஆரியர்: வடநாட்டுச் சாதியரில் ஒருவர், யானை

பழக்குதலில் வல்லுநர். அகம் 276:6
வடநாட்டு அரசரில் ஒரு சாரார்.
அகம் 396:16

இமயம்: வடவரை, பொன்படுநெடுங்கோடுடையது. நற். 356:3
வடவரை. பதிற்று 43:7

இதனைப் 'பொன்னுடை நெடுங்கோட்டிமயம்' என்று புறத்திலும் கூறுவார். புறம் 369:24

இருப்பை: (புனல் வாயில்) வயவனுக்கு உரிய ஊர். நற். 260:7 இவ்வயவன் விரா அன் போலும். நற். 350:4

உறந்தை; தித்தன் ஆண்ட ஊர். அகம் 6:5
தித்தனது இவ்வூர் மதிலாகிய வேலியையுடையது. அகம் 122:21 உறையூர்; தித்தன் வெளியனது தலைநகரம்.
அகம் 226:14 புறம் 352:10

ஊணூர்: தழும்பற்குரிய ஊர். நற். 300:10
புறம் 348 5

எவ்வி: நீடூரில் ஆண்ட ஒரு தலைவன். இவன் அரிமணவாயில் உறத்தூர் என்னுமிடத்தில் தன் பகைவர்களை வென்றான். அகம் 266:10 உறு தலைவன். குறுந். 19:1

ஏழில்: ஒரு மலை; நன்னனுக்குரியது.
அகம் 152:13

ஐயை: ஒரு கற்புடைய மகள்; தித்தன் என்னும் உறந்தை காவலன் மகள். அகம் 6:3
கொல்லிமலைக்குத் தலைவன்.
அகம் 208:21

ஒரு வள்ளல், கானம் ஒன்று இவனது. குறுந். 199:3 ஒரு சிற்றரசன், வள்ளல். 'வல் வில்' என்னும் அடைமொழி இவன் போர்த்திறனைக் காட்டும். இவன் 'கானம் நாறும்' என்றது ஆண்டுப்பல மலர்ச் செடி கொடிகள் மிகுந்திருந்தமை

பற்றிப் போலும். நற். 6 : 9; 265 : 7.

கட்டி: இவனும் பாணன் என்பானும் தித்தன் வெளியனேடு பொரக் கருதி வந்து அவனது அவைக்களத்தெழுந்த முரசொலி கேட்டஞ்சிப் பொராது ஓடினர். அகம் 226:16

கண்ணகி: வையாவிக் கோப்பெரும் பேகனின், அவனுல் துறக்கப்பட்ட, மனைவி; இவள் காரணமாக அப்பேகனைப் பரணர் பாடினுர். புறம் 144: அடிக்குறிப்பு புறம் 145: ,,

கணையன்: பாணனுல் வெல்லப்பட்ட ஆரியப் பொருநனது 'கிடக்கை' யைக் கண்டு நாணியவன். இவன் பாணனது நண்பன் அன்றிப் பகைவன் ஆதல் வேண்டும். அகம் 386 : 8

கரிகால்: ஒரு சோழன், வாகைப் பறந்தலையில் ஒன்பது மன்னர்களை ஒருங்கே வென்றவன். அகம் 125 :18.

இவன் வெண்ணிவாயிலில் பதினெருவேளிர், சேர பாண்டியர் என்பாரைப் பொருது வென்ருன். அகம் 246:8

இவன்காண அத்தியைக் காவிரி ஈர்த்துச் சென்றது. அகம் 376:5

கவிரம்: ஆய்க்கு உரிய ஒரு மலை. அகம் 198:15

கழார்: மத்தி என்பான் ஆண்ட ஊர். அகம் 6:20 இங்கு நிகழ்ந்த விழாவில் ஆட்டனத்தியை ஆறு இழுத்துச் சென்றது. அகம் 222:5

காவிரிக் கரையது ஓரூர்; இதற்குரியன் மத்தி. அகம் 226:8; 376:4

கழுவுள்: காமூர்க்குத் தலைவன்; ஈரெழுவேளிரைக் காமூரில் ஒருங்கே வென்றவன். அகம் 135:13

காவிரி: ஓர் ஆறு. அகம் 181:12; குறுந். 258:2; பதிற்று. 50:6 உறந்தை இதன் கரையது; கழைக்கோலும் நிலை கொள்ளாத நீர்ப் பெருக்குடையது. அகம் 6:6 நெடுஞ்சுழி நீத்தம் உடையது. அகம் 62:9; 222:8 ஆட்டன் அத்தியை ஈர்த்துச்சென்றது. அகம் 76:12; 376:10; 396:14. இதன் கரையது போார். அகம் 186:16; இதன் கரையது கழார். அகம் 226:10. பதிற்று. 50:6.

(மறப்போர்க்)குட்டுவன்: சேரன் கடல் பிறக்கோட்டியவன். அகம் 212:16. சேரர்களுக்குப் பொதுப்பெயர், ஈண்டுச் செங்குட்டுவன் போலும். அகம் 376:17 இவன் கடலுழ்ந்து பகைவரை வென்றனன். பதிற்று. 41:27, 42:20-21, 45:21-22, 46:12-13. இவன் மோகூர் மன்னனை வென்றனன். பதிற்று 49:8, 49:17. இமயம் - குமரி இவற்றிடையுள்ள பல மன்னரை வென்றனன். பதிற்று. 43: 6-11. மோகூர் மன்னனின் முரசத்தைக் கைக்கொண்டு அவனது கடிமரமான வேம்பினை வேரறுத்து அதனின்று முரசு செய்தவன். பதிற்று. 44:14-16. குடவர் கோமான் நெடுஞ்சேராலாதற்குச் சோழ குல அரசியீன்ற மகன்; கண்ணகிச் சிலையாக்கக் கற்கொணர இமயம் சென்று வழியில் ஆரிய அண்ணலை வென்றனன். ஆண்டு கங்கையிற் இணைந்துப் பல ஆநிரைகளைக் கைக்கொண்டு, இடும்பற் காட்டில் தங்கிப்பல வீரர்களை வென்று பழையனது காவன் மரமான வேம்பினை அடி துமித்துப் பகையரசர் மனைவியின் கூந்தலாற் கயிறு திரித்து யானைகளைப் பூட்டி ஒட்டி சோழகுலத் தோன்றல் காண ஒன்பது அரசரை (நேரி) வாயிற் புறத்தே வென்று விளங்கியவன். இவனைப் பரணர் பதிற்றுப்பத்தில் 5-ம் பத்திற் பாடினர்; பாடி அவர் பெற்ற பரிசில் உம்பற்காட்டு வாரியையும்

| | | |
|---|---|---|
| | அவன் மகன் குட்டுவன் சேரலையும் பதிற்று 5-ம் பத்து பதிகம் இவனது பட்டினம் முசிறி; இவன் செங்குட்டுவன் போலும். | புறம் 343:9 |
| | இவனைச் சேரமான் கடலோட்டிய வே (வெ) ல் கெழுகுட்டுவன் என்றும் வழங்குவர். புறம் 369 அடிக்குறிப்பு. | |
| குமரி: | தென் குமரி | பதிற்று. 43:8 |
| குறும்பியன்: | திதியற் கொரு பெயர் | அகம் 262:9 |
| குன்றூர்: | வேளிர்க்குரியது | நற். 280:8 |
| கூடல்: | திருமுக்கூடல் | பதிற்று. 50:7 |
| கூடற் பறந்தலை: | மதுரையருகில் ஒரு போர்க்களம்; இங்கு மறப்போர்ச் செழியன் சேர சோழர் களை வென்றான். | அகம் 116:14 |
| கொங்கர்: | வாகைப்பறந்தலையில் அதிகனை வென்று கொன்றவர். | குறுந் 393:6 |
| கொல்லி: | சேரர்க்கு உரிய மலை. | அகம் 62:13 |
| | ஓரிக்கு உரிய ஒரு மலை | அகம் 208:22 |
| | பெரும் பூட்பொறையனது ஒரு மலை, இதில் ஒரு தெய்வம் உண்டு. | குறுந். 89:4 |
| | ஓரிக்கு உரியதும் பொறையற்கு உரியதும் வெவ்வேறு கொல்லி மலையன்று; பொறையன் சேரனாகிய முடியுடை வேந்தனாதலின், அச்சேரனுக்கும் அவற்குக் கீழ்ப்படிந்து ஆண்ட ஓரிக்கும் அம் மலை ஒருங்கே உரித்தாயிற்று என்க. | |
| | கொங்கு நாட்டு மலை; இதனைத் 'தெய்வம்' காக்கும் | நற் 265:7 |
| கோசர்: | அன்னி மிஞிலி என்பாளின் தந்தையின் கண்களை அழித்தவர். இவர்களைத் திதியன் வென்று மிஞிலியன் சினம் தீர்த்தான். இவர்களைச் சதியபுத்ரர் | |

| | |
|---|---|
| | என்று கருத இடமுண்டு. அகம் 196:10; 262:6 சூழ்ச்சியில் வல்லுநர் ஒரு சில வீரர். குறுந் 73:4 |
| சென்னி: | சோழற்குப் பொதுப் பெயர்; இவன் ஆர் (ஆத்தி) மாலையணிபவன் நற்.265:6 |
| சேந்தன்: | ஐயந்தன் என்பதன் மரூஉ; அழிசி என் பானின் மகன். குறுந். 258:4 |
| சேந்தன் தந்தை: | இவன் பெயர் அழிசி; ஆர்க்காட்டிற் குரியன் குறுந். 258:7 |
| சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதன்: | இச்சேரன், சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளியோடு பொருது வீழ்ந் தான்; அப்பொழுது பரணரால் பாடப் பட்டனன். புறம் 63 அடிக்குறிப்பு |
| சேரல்: | சேரன்; இவன் எழுமுடிமார்பினன். பதிற்று. 45:6 |
| சோழன்: | மூவேந்தரில் ஒருவன். அகம் 326:9; 356:12. |
| சோழன் உருவப்பஃறேர் இளஞ் சேட்சென்னி: | பரணரால் பாடப்பட்ட ஒரு சோழன் புறம் 4. அடிக்குறிப்பு |
| சோழன் வேற்பஃறடக் கைப் பெருவிறற்கிள்ளி: | இச்சோழன், சேரமான் குடக்கோ நெடுஞ் சேரலாதனோடு பொருது வீழ்ந்தான்; அப்போது பரணரால் பாடப்பட்டனன். புறம் 63. அடிக்குறிப்பு |
| தலையாறு: | ஆய்க்கு உரிய ஊர். அகம் 152:22 |
| தழும்பன்: | போரில் ஏற்ற புண் முதிர்ந்த தழும்பை யுடையனுதல் பற்றி இப்பெயர் பெற்ற னன் போலும்; 'பெருப்புண் ஏஎர் தழும்பன்' என்றமை காண்க. இவற் குரியது ஊணூர். நற். 300:10; புறம் 348:5 பிற நூல்களில் இவனை 'வழு துணைப் பெரும் பெயர்த் தழும்பன' என்றும் வழங்குவர். |
| திண்தேர்ப்பொறையன்: | ஒரு சேரன், இவன் தொண்டிக்குரிய வன். குறுந். 128:2 |

| | | |
|---|---|---|
| தித்தன்: | உறந்தை காவலன் இவன் மகள் ஐயை என்பாள் } அகம் 6:4 | |
| | நல்ல குதிரைகளையுடைய ஒரு தலைவன்; உறந்தைக்குரியன். அகம் 122:21 இவன் உறந்தையன், இவனை 'மாவண்தித்தன்' என்பர். புறம் 352:9 | |
| தித்தன் (வெளியன்): | இவன் அவையின் முரசொலி கேட்டு அஞ்சிப் பாணனும் கட்டியும் பொர வந்தவர்கள் பொராதே ஓடினர். அகம் 226:14 | |
| | கானலம் பெருந்துறை என்னும் பட்டினத்திற்கு உரியன். அகம் 152:5 | |
| திதியன்: | மிஞிலியன் சார்பில் கோசரை வென்றவன். அகம் 196:11 அன்னி மிஞிலிக்காக, அவள் தந்தையின் கண்களைக் களைந்து விட்ட கோசர்களைத் தண்டித்தவன். அகம் 262:10 | |
| | பொதியில் மலைக்குத் தலைவன். அகம் 322:8 | |
| தொண்டி: | திண்தேர்ப் பொறையற்குரிய பட்டினம். குறுந். 128:2 | |
| நள்ளி: | ஒரு தலைவன். அகம் 152 15 | |
| நன்னன்: | ஒரு சிற்றரசன், பாழிக்கு உரியன். அகம் 142:9 பாரத்துத் தலைவன், பிண்டனை வென்றவன். அகம் 152:12 இவன் ஆய் எயினனிடம் மிஞிலி பொருது பட்டானாக, அவன் உடலத்தைக்காண யாதோ ஒரு காரணத்தால் மறுத்தவன் அகம் 208:14 | |
| | பறம்பு மலைக்குரியவன். அகம் 356:8, 19 புன்னாட்டினரை வெகுண்டெழுந்தவன். அகம் 396:2 | |
| | மாவினைக் காவன் மரமாகக் கொண்டவன். குறுந். 73:2 | |
| | ஓர் அரிவை தன் தோட்டத்துப் புனல் தருமாங்காய் ஒன்றினைத் தின்றதன் தப்பற்கு, எண்பத்தொரு களிற்றினொடு | |

அவள் நிறை பொன் செய்பாவை அவள் பெற்ருேர் கொடுப்பவும் கொள் ளாஞய் அப்பெண்ணைக் கொன்றவன். குறுந். 292:5

இவன் பகைவரது உரிமை மகளிரைப் பற்றி அவர் தம் தலையை மழித்து அக் கூந்தலைக் கயிருகத் திரித்து அக்கயிறு கொண்டு யானைகளைப் பிணித்த கொடி யன். நற். 270:9

நன்னன் உதியன்: ஒரு குறுநில மன்னன். இவற்குரியது பாழி. அகம் 258:1

நீடூர்: எவ்வி என்னும் சிற்றரசனின் தலைநகரம் அகம் 266:10

பசும்பூட்பாண்டியன்: ஒரு மன்னன் அகம் 162:21

பரதவர்: வலைஞர் குடியினர், இவர்கட்குத் தலைவன் மத்தி. அகம் 226:7

பழையன்: காவிரிக் கரையிலுள்ள போர் என்னும் ஊருக்குத் தலைவன். அகம் 186:15; 326:12.

பறம்பு: நன்னற்குரியதோர் மலை. அகம் 356:8,19.

பாணன்: இவனும் கட்டி என்பானும் தித்தன் வெளியனோடு பொரக்கருதிச் சென்ற வர். அவன் அவைக்கண் முரசொலி கேட்டு அஞ்சிப் பொராதே ஓடினர். அகம் 256:13

ஆரியப் பொருநனை மற்போரில் வென்று கொன்றவன். அகம் 386:3

பாரம்: நன்னனுக்கு உரிய ஊர். அகம் 152:12

பாவை: கொல்லிமலையில் எழுதிய கடவுட்பாவை அகம் 62:15; குறுந். 89:6

பாழி: ஏழில் மலையையடுத்த ஒருபக்க மலை; நன்னற்குரியது. அகம் 152:13. இவ்வூர்ப் போர்க்களத்தே வெளியன் வேண்மான் ஆய்எயினன் மிஞிலியோடு பொருதுபட்டான். அகம் 208:6

நன்னற்குரியதோர் ஊர். இதில் பழைய வேளிர் மிகுந்த பொன்னைப் பொதிந்து வைத்தனர். அகம் 258:1, 372:3, 396:3.

பிண்டன்; ஒரு தலைவன்; இவன் நன்னனிடம் தோற்றவன். அகம் 152:9.

புகார்: காவிரிப் பூம்பட்டினம். அகம் 181:22

புன்னாடு: குடகடற்பக்கத்து நாடு. அகம் 396:2

பூழியர்; பூழி என்னும் நாட்டினர். அகம் 6:8

(கானலம்) பெருந்துறை: தித்தன் வெளியனுக்கு உரிய பட்டினம். அகம் 152:6

பெரும்பூட்பொறையன்: ஒரு சேரன்; கொல்லிமலைக்குத் தலைவன். குறுந் 89:4

பேகன்: வண்மையுடையன், ஒரு தலைவன். அகம் 262:16

இவனை வையாவிக் கோப்பெரும் பேகன் என்பர்; இவன் ஒரு மயிலுக்கு, அது 'உடாஅ போரா ஆகுதலறிந்தும்' படாஅம் ஈந்தவன். அவ்வீகை மறுமை நோக்கிற்றன்று, பிறர் வறுமை நோக்கிற்று. புறம். 141:12 மற்றும் அடிக்குறிப்பு.

இவன் கொடைமடம் படினும் படைமடம் படான். புறம். 142:4

வேறொருத்தியைக் காதலித்து இவன் தன் மனைவியான கண்ணகியைத் துறந்தனன்; அவள் துயர் கண்டு பொறாத பரணர் இவனை அவள் காரணமாகப் பாடினார். புறம் 144:12, 145:3 மற்றும் அடிக்குறிப்பு

| | |
|---|---|
| பொதியில்: | திதியனுக்குரிய மலை. அகம் 322:14 |
| பொறையன்: | மலை நாட்டான்; சேரனுக்கு ஒரு பொதுப் பெயர். அகம் 62:13 |
| போர்: | காவிரிக்கரையில் உள்ளதோர் ஊர்; இதன் தலைவன் பழையன். அகம் 186:16, 326:11. |
| மத்தி: | இவன் பரதவர் தலைவன்; கழார் என்னும் ஊர்க்குரியன். அகம் 6:20, 226:8. |
| மரந்தை: | சேரனது ஊர்; மாந்தை எனவும் படும். அகம் 376:18. |
| மருதி: | ஆதிமந்திக்கு ஆட்டனத்தியைக் காட்டித் தான் மாய்ந்த பெருமையுடையள். அகம் 222:12 |
| மலையன்: | வள்ளன்மையுடைய மலையமான்; இவன் பல்தேர் உடையன் என்பது 'தேர்வண்' என்னும் அடையாற் பெறப்படும். நற். 100:9 |
| மறப்போர்ச் செழியன்: | கூடற்பறந்தலையில் சேர, சோழர்களை வென்ற ஒரு பாண்டியன். அகம் 116:13 |
| மாந்தரன் பொறையன் கடுங்கோ: | ஒரு சேரன்; இவன் ஒரு வள்ளல். அகம் 142:4,5. |
| மிஞிலி: | இவன் பாழியில் அதிகனைப் போரில் கொன்றவன். அகம் 142:11 ஆய்எயினனைப் போரில் கொன்றவன். அகம் 148:8, 181:5. பாழிப்பறந்தலையில் வெளியன் வேண்மான் ஆய் எயினனைக் கொன்றவன். அகம் 208:7, 396:5<br>இவன் பாரம் என்னும் ஊரைப் பாதுகாத்து வந்தான். நற் 265:4 |
| மோகூர் மன்னன்: | இவனைச் செங்குட்டுவன் வென்றனன். பதிற்று. 44:14 இவனை உ. வே. சா. பழையன் என்பார். பதிற்று. 49:8 |

வஞ்சி: சேரர் தலைநகரம். அகம் 396:19

வடவரை: இமயம்; இதில் வஞ்சியோன் சேரன் விற்பொறியைப் பொறித்தனன். அகம் 396:17

வயவன்: இவன் விராஅன் என்பவன் போலும்; புனல்வாயில் இருப்பை என்னும் ஊர்க்கு உரியன். நற். 260:6.

வல்லம்: சோணாட்டதோர் ஊர். இதன் தலைவன் நல்லடி. அகம் 356:14 (ந.மு. வேங்கட சாமி நாட்டார் 'நல்லடி' என்பதை நல் அடி என்று பிரித்து 'நல்லடி:நன்மை, அது பிறருக்குத் தீங்கு புரியாமை' என்றுரைத்தார் அவர் தம் நித்திலக் கோவையுரையில். ஆயினும் நல்லடி என்னும் பெயர் சோழ பரம்பரையில் கோச்செங்கட்சோழன் மகன் பெயராகக் காணப்படுதலால் இதனையும் சோழர் குலத்து வந்த ஒருவன் பெயராக ஈண்டு கொள்ளப்பட்டது)

வாகைப்பறந்தலை: வாகை என்னும் ஊர்ப்புறத்துப் போர்க்களம்; இங்குக் கரிகாலன் ஒன்பது மன்னர்களை ஒருங்கே வென்றனன். அகம் 125:19

விராஅன்: இருப்பை என்னும் ஊர்க்குரியன். நற்.350:4.

வெளியன் வேண்மான் ஆய்எயினன்: வெளியன் வேண்மானது மகன் ஆய் எயினன் என்றேனும் வெளியன் வேண் மானாகிய ஆய்எயினன் என்றேனும் பொருள்படும். இவன் பாழிப் பறந்தலையில் மிஞிலியோடு பொருது வீழ்ந்தனன். இவன் பட்டஞான்று இவன் போற்றிய புட்கள் இவன் உடல் மீது வட்டமிட்டு நிழல் செய்தன. அகம் 208:5

**வேந்தர்:** ஈண்டு சேர பாண்டியர்கள். இவர்களைக் கரிகாலன் வெண்ணி வாயிலில் வென்றான். அகம் 246:12. தமிழ்முடியுடை வேந்தரில் சோழ பாண்டியர் பதிற்று. 49:7

**வேள்...மாக்கள்:** வேளிர் குறுநிலமன்னரில் ஒரு சாரார் அகம் 3724

**வேளிர்:** இவர்களில் 'ஈரெழுவ'ரைக் கழுவுள் என்பான் காமூரில் வென்றான். அகம்135:12 இவர்களில் பதினொருவரைக் கரிகாலன் வெண்ணிவாயிலில் வென்றனன். அகம் 246:12 இவர் சில குறுநில மன்னர். நன்னனது பாழி என்னுமிடத்தில் மிகுந்த பொன்னைப் பொதிந்து வைத்தனர். அகம் 258:2 இவர் பண்டையர் என்பது பற்றித் 'தொன்று முதிர்' என்னும் அடைபெற்றனர். இவர்க்குரியது குன்றூர். நற். 280:8; பதிற்று. 49:7.



